

யத்பதாம் போருஹத்யாந வித்வஸ்தாஸேஷ கல்மஷ: |

வஸ்து தாமுபயாதோSஹம் யாமுநேயம் நமாமி தம் ||

(கீதாபாஷ்ய மங்களம்)

எவருடைய திருவடித்தாமரைகளைத் தியானிப்பதால் எல்லா தோஷமும் நீங்கப்பெற்று யான் ஒரு பொருளாக ஆனேனோ, அத்தகைய யமுனைத் துறைவரை வணங்குகிறேன்.

# ஸப்தகிரி

ஜூலை-1991

தனிப்பிரதி ரூ. 1 — மலர் 22

வருடச்சந்தா ரூ. 12 — இதழ் 2

## உள்ளுறை



அட்டைப்பட விளக்கம்

முன்னட்டை : திருமலைககோயிலில ஆனிவார ஆஸதானம

2-வது பக்கம் : திரு பி.வி நரசிமமாராவ அவரகள
பாரதபபிரதமர

3-வது பக்கம் . ஸ்ரீவியாசர
- சிததிரம ஆர.பி பாபுநாத திருபபதி

பின்னட்டை . ஸ்ரீ கலயாணவெஙகடேஸவரசுவாமி கோவில
ஸ்ரீநிவாசமஙகாபுரம

சிறப்பாசிரியர் — அசசிடுபவர்

திரு எம்.வி.எஸ் பிரஸாத், ஐ.ஏ.எஸ்.,
செயலாடசிததலைவர,
தி.தி.தேவஸதானம,
திருபபதி

திரு எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி.தேவஸதான அசசகம,
திருபபதி.

ஆசிரியர்:
திரு கே சுப்பாராவ், எம்.ஏ.,

துணையாசிரியர்
திரு.என் எஸ் ராமமூர்த்தி, எம்.ஏ.,

பிரதிகளுக்கு
EDITOR,
"Sapthagiri"
T.T.D , Tirupati

# உங்களுடன்...

மன்னராட்சியோ, மக்களாட்சியோ ஆளுபவரின் பண்புகளின், செயல்திறங்களின் மீது தான் ஆளப்படுவோரின் இன்பமும், துன்பமும் ஆதாரப்படுகிறது. இது வரலாறு காட்டிடும் செய்தியாகும். சமுதாய மேம்பாட்டின் மீது அமைக்கப்படும் அரசியல் அமைப்பு நாட்டுக்கு நலம் விளைவிக்கும். அரசியல் தத்துவத்தின் சிறப்பும், பெருமையும் அது எந்த அளவு சமூக விழிப்புணர்வைத் தட்டி எழுப்புகிறது, சமூக பொருளாதார பிரச்சனைகளை எதிர்கொள்கி றது என்பதைக் கொண்டுதான் பேசப்படும். மேலும் சமுதாய சீரழிவு ஆரோக்கியமற்ற ஓர் அரசியலைத்தான் உருவாக்க வழிவகுக்கும்.

வன்முறைகளும், போராட்டங்களுமே நாளும் நடைபெறும் காட்சிகளாக அண்மைக்கா லமாக நம் நாடு கண்டு வருகின்றது. இந்த நிலையில் நல்ல அரசியல் அமைப்பினையோ, ஒரு நல்ல அரசியல் தலைவரையோ காண்பது என்பது அரிதான ஒன்றாக உள்ளது. பத விக்காகவும், புகழுக்காகவும், பொருளுக்காகவும் அரசியலை ஒரு வியாபாரமாகக் கொண்டு வாழும் பலர் நடுவில் சற்றே விலகி, பிரச்சனைகளுக்கு அப்பாற்பட்டவராகவும், எதிர்ப்புக ளுக்கு உள்ளாகாதவராகவும், சொல்லம்புகளுக்கு இலக்காகாதவராகவும், குற்றச்சாட்டுகளுக்கு இடம்கொடுக்காதவராகவும் உள்ள ஒரு சில அரசியல்வாதிகளில் ஒருவராக விளங்கி தனக் கென ஒரு தனிப்பண்பினைப் பெற்று, அரசியல் வட்டாரங்களில் 'பி.வி.' என்று சகஜமாக அழைக்கப்பெறுபவரான திரு. பி.வி. நரசிம்மாராவ் அவர்கள் தற்போது பாரதத்தின் பக்தா வது பிரதமராக பதவி ஏற்றுள்ளார்.

சமய ஈடுபாடு ஒன்றுதான் மக்களுக்கு வாழ்க்கையில் ஒரு நம்பிக்கையினை ஏற்ப டுத்தும் என்ற நிலையில், நாட்டில் நிலவ வேண்டிய அமைதியினை மனதிற்கொண்டே, சுமுகமான சூழ்நிலையில் நிலையான ஆட்சியை மக்கள் எதிர்பார்க்கின்றனர். மக்கள் மேன் மையுற, அதற்கு இந்து சமயம் வழிகாட்டும் வகையில், நாட்டினை அழைத்துச்செல்ல ஒரு நல்ல அரசியல் தலைவர் வேண்டும் என்று நாடே எதிர்பார்க்கும் இத்தருணத்தில் புதிய பிரதமராகப் பதவி ஏற்றுள்ள திரு பி.வி. நரசிம்மா ராவ் அவர்கள் ஒரு நம் பிக்கை நட்சத்திரமாகத் தெரிகின்றார். மாநில அரசு அளவிலும், மத்திய அரசு அளவிலும் முதல்வராகவும், பல்வேறு துறைகளைச் சார்ந்த அமைச்சராகவும் பதவி வகித்த அவர் ஒரு தேர்ந்த நிருவாகஸ்தர் என்பதில் சிறிதும் ஐயமில்லை. தொடர்ந்து ஒரே கட்சியில் இருந்து தொண்டாற்றி, கட்சி அலைகளினால் பலமுறை ஓரந்தள்ளப்பட்டாலும், அதனால் வெறுப்போ, கோபமோ கொள்ளாமல், 'கர்ம வீரர்' போன்று செயற்பட்ட அவர் பதவிகளைத் தேடிச்செல்லாது, அவரைத் தேடித்தான் பதவிகள் வந்தன என்பதை எண்ணிப் பார்த்திடின் இன்றைய அரசியல்வாதிகளின் இடையில் அவர் பெற்றுள்ள சிறப்பு தெள்ளெனத்தெரியும்.

அரசியலும், காழ்ப்புணர்ச்சியும் ஒன்றுக்கொன்று உறவு கொண்டவை என்பது ஒரு உலக அரசியல் தத்துவமாக விளங்கிடும்போது, இம்மண்ணும் இன்று இதற்கு விதி விலக்கல்ல என்புதற்கு கடந்த சில ஆண்டுகளாக இந்திய அரசியலில் வன்முறை ஓர் அங்கமாக இருக்கும் இன்றையச் சூழ்நிலையில், சேற்றில் செந்தாமரையாக, அவதூறுகளுக்கு அப்பாற்பட்டவராக, கட்சி அளவிலோ, நிருவாக நிலையிலோ, தனிப்பட்ட முறையிலோ உட் பூசல்களுக்கு உள்ளாகாமல், பயன்கருதா பண்பாளராக திரு. பி.வி. நரசிம்மா ராவ் அவர்கள் விளங்குவது நம் எதிர்காலத்திற்கு ஓர் உத்திரவாதம் ஏற்படவே வழிவகுக்கின்றது. போதும் என்ற மனப்பாங்கு உடையவர் போற்றப்படுவார் என்பதற்கு ஓர் உதாரணமாக விளங்கிடும்

(48-ம் பக்கம் பார்க்க)

**ஹனுமத் ஜயந்தி**

திருமலையில் கோயிலிலிருந்து சுமார் 5 கி.மீ. தொலைவிலுள்ள ஜாபாலி தீர்த்தத்தின் அருகே அமைந்துள்ள ஸ்ரீஹனுமார் கோயிலில் ஹனுமத் ஜெயந்தி' விழா அண்மையில் வெகு விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. அது போது 'அகண்ட பஜனை'யும், 'சிறப்பு அபிஷேகமும்' நடைபெற்றன. மேலும் இந்த நிகழ்ச்சியின் போது நூறு இளைஞர்கள் 'அனுமத் தீக்ஷை' பெற்றது குறிப்பிடத்தக்கது

* * * *

**சொற்பொழிவு**

திருமலை திருப்பதி தேவஸ்தான திவ்ய பிரபந்தச் செயல் திட்டத்தின் சார்பாக அன்னமாச்சார்ய கலா மந்திரத்தில் ஜுன் 28-ம் தேதி மாலை "ஆழ்வார்கள் பாடலில் கோவிந்த நாமத்தின் பெருமை" என்பது பற்றி ஸ்ரீவேங்கடேஸ்வரா கீழ்த்திசைக் கல்லூரி விரிவுரையாளர் ஸ்ரீஉவே. P.R. ரங்கராஜன் ஸ்வாமி அவர்களும் 'திருவாய்மொழியும் நம்மாழ்வாரும்' என்பது பற்றி திவ்ய பிரபந்தச் செயல்திட்டத் தனிஅலுவலர் டாக்டர் மா. வரதராஜன் அவர்களும் சொற்பொழிவாற்றினர்

* * * *

**வெளிநாட்டுப் பயணம்**

திதி தேவஸ்தானத்தாரின் ஸ்ரீஅன்னமாசார்யா விளம்பரத் துறையின் ஒத்திசைவாளர் டாக்டர். மேடஸானி மோகன் அவர்கள் இம்மாதம் நடைபெறவிருக்கும் வடஅமெரிக்கா தெலுங்குச் சங்கத்தின் 8-வது மாநாட்டில் கலந்து கொள்வதற்காக அமெரிக்கா சென்றுள்ளார். அஷ்டாவதானக் கலைஞரான திரு. மோகன் அவர்கள் அமெரிக்கா, இலண்டன், மற்றும் கனடா நாடுகளிலும் அஷ்டாவதான நிகழ்ச்சிகளையும், இந்து சமயச் சொற்பொழிவுகளையும் நிகழ்த்துவார்.

* * * *

**பொறுப்பாண்மைக்குழு முடிவுகள்**

ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடத்தைச் சார்ந்த ஸ்ரீசங்கராச்சார்யர் சுவாமிகளின் ஆலோசனைப்படி திருமலையில் வேதம் சம்பந்தமான 'மாநாடு' ஒன்று விரைவில் நடத்த தி.தி. தேவஸ்தான மேலாண்மைக்குழு முடிவு செய்துள்ளது.

* * * *

திருமலையில் குடிநீர் வசதியினை மேலும் விரிவு படுத்தும் வகையில், திருமலையிலுள்ள ஆகாச கங்கை எனும் நீர்வீழ்ச்சிக்குக் குறுக்கே மற்றொரு அணை கட்டப்பட உள்ளது.

* * * *

திருப்பதி நகரத்தில் பிரகாசம் சாலையிலுள்ள திதி தேவஸதானத்தாரின் பொதுப் பணித்துறைக் கடடிட வளாகத்தில் தேவஸ்தானத்தாரின் திறந்த வெளி அரங்கு ஒன்று ரூபாய் ஒரு கோடி செலவில் கட்டப்படும்.

* * * *

திருப்பதியிலுள்ள தி.தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீபத்மாவதி மகளிர்கல்லூரிக்கான கட்டிடங்களைக் கட்டுவதற்காக ரூ. 1 கோடி ஒதுக்கப்பட்டுள்ளது.

* * * *

திருப்பதியில் ஸ்ரீ கோவிந்தராஜசுவாமி உயர்நிலைப்பள்ளிக்காக புதியதாகக் கட்டப்படவிருக்கும் கட்டிடங்களுக்காக ரூ. 55 இலட்சம் ஒதுக்கப்பட்டுள்ளது.

* * * *

# செய்திச் சுருக்கம்

அடுத்தமாதம் ஆந்திர மாநிலத்திலுள்ள ராஜமுந்திரியில் 12 நாட்களுக்கு நடைபெற விருக்கும் 'கோதாவரி புஷ்கராலு' எனும் நதிநீர் விழாவில் தி.தி. தேவஸ்தானம் ரூ. 15 இலட்சம் செலவில் சமய நிகழ்ச்சிகள், இசை நிகழ்ச்சிகள், சமய நூல் விற்பனை நிலையங்கள் ஆகியவற்றை நடத்த உத்தேசித்துள்ளது. இதுபோது புதிதாக சுமார் 30 சமய நூல்களை [தெலுங்கு, ஆங்கிலம்] வெளியிட உள்ளது.

* * * *

**திருமலையில்...**

அகில இந்திய காங்கிரஸ் கட்சித் தலைவர் திரு. பி.வி. நரசிம்மாராவ் அவர்கள் 8-6-91 அன்று திருமலைக்கு வருகை

(48-ம் பக்கம் பார்க்க)

# ஆயிரத்தில் ஒரு சொல்

திரு. தி. ரங்கராஜன் - கோயம்புத்தூர்.

சாதாரண வழக்கில் "நூற்றில் ஒரு சொல்" "ஆயிரத்தில் ஒரு சொல்" என்ற தொடர் இருக்கிறது. இந்த சொற்றொடருக்கு நீ சொன்ன ஆயிரம் வார்த்தைகளில் இந்தச் சொல் மிகச்சிறந்தது என்று பொருள்.

ஆனால் "விஷ்ணு ஸஹஸ்ரநாமம்" என்னும் ஸ்தோத்திர நூலில் வரும் ஆயிரம் நாமங்களுமே சொற்செறிவு, பொருட்செறிவு நிரம்பியவை.

ஸ்ரீமன் நாராயணனுக்கு எண்ணிறந்த நாமங்களும குணங்களும் உள்ளன என்று ஆழ்வார்களின் அருளிச் செயல்களும் ஆசார்யர்களின் ஸ்தோத்ரங்களும், வேதங்களும், உபநிஷத்துக்களும் சொல்கின்றன. அவையெல்லாம், நம்மால் பூரணமாக அறியமுடிவதில்லை. அறிவும் போதாது காலமும் போதாது.

அவற்றுள் த்ருடவ்ரதனும், மஹா ஞானியுமான ஸ்ரீபீஷ்மாசார்யார் அருளிய ஆயிரம் நாமங்கள் கொண்ட ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமம் நித்ய பாராயணத்திற்கு மிகவும் உகந்தது நித்ய பாராயணம், ஒவ்வொரு நாமத்திற்கும் அர்த்தம் தெரிந்து கொண்டு செய்தால் ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரத்தில் நம் மனம் ஆழ்ந்து அனுபவிக்கலாம். ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தைப் பற்றி ஆழ்வார்கள் பலவிதமாக அனுபவித்திருக்கிறார்கள்.

நம்மாழ்வார்

தாளகளை எனக்கே தலைத்தலைச்<br>
சிறப்புத் தந்த பேருதவிக்<br>
கைம்மாறு<br>
தோள்களை யாரத் தழுவி<br>
என்னுயிரை அறவிலை<br>
செயதனன் சோதி<br>
தோள்களாயிரததாய<br>
முடிகள் ஆயிரத்தாய்<br>
துணைமலர்க் கண்களாயிரத்-<br>
தாய்<br>
தாள்களாயிரத்தாய்<br>
பேர்களாயிரத்தாய்<br>
தமியனேன் பெரியஅப்பனே<br>
(8-1-10)

என்று அனுபவிக்கிறார்.



திருமங்கையாழ்வார்,

ஓதியாயிர நாமங்களுணர்ந்த<br>
வருக்கு<br>
உறுதுயரடையாமல்<br>
ஏதமின்றி நின்றருளும் நம்<br>
பெருந்தகை<br>
இருந்த நலிமயத்து<br>
தாதுமல்கிய பிண்டி விணடலர்-<br>
கின்ற<br>
தழல புரையெழில் நோக்கி<br>
பேதை வணடுகள் எரியென<br>
வெருவரு பிருதி சென்றடை<br>
நெஞ்சே<br>
(1-2-9)

என்று அனுபவிக்கிறார்

பெரியாழ்வார் 3ம் பத்து 7ம் திருமொழியில்,

பேர்ததேவன்

திறம் பிதற்றும்"

என்றும்,

ஆண்டார் நாச்சியார் திரு மொழி -2ம் திருமொழியில்

"நாமமாயிரம ஏத்த நினற நாராயணு; நரனே"

என்றும் அனுபவிககிருர்கள்.

விஷ்ணு ஸஹஸ்ரநாமத்திற்கு ஆதி சங்கராச்சார்ய ஸ்வாமிக ளும், ஸ்ரீ வைஷ்ணவ ஆசார்ய ஸ்ரேஷ்டரான பராசரபட்டரும் வ்யாக்யானம் செய்திருக்கிருர் கள். வேறு பலரும் வ்யாக் யானம் செய்திருந்தாலும் மேற் சொன்ன இரண்டு வ்யாக்யா னங்களே முதன்மையானவை

மேற்படி வயாக்யானங்களை வைத்துக் கொண்டு விரிவுரை சொல்ல முற்பட்டாலும ஒரு நாமத்திற்கு பல மணி நேரம் ஆகும். ஆனாலும் ஏதோ ஒரு சொல்லை எடுத்துக்கொண்டு சில நிமிஷ நேரம் சிந்தனை செய்வோம்.

"கால" என்ற சொல்லை நாம் இப்போது எடுத்துக் கொள் வோம்.

ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமத் தில் 76வது ஸ்லோகத்தில

ருது: ஸுதர்சன கால:
பரமேஷ்டி பரிக்ரஹ:
உக்ர: ஸம்வதஸரோ தக்ஷோ
விஸராமோ விஸ்வதக்ஷிண:

"கால" என்ற நாமம் வருகி றது. 419-வது நாமாவளி மெலெ விட்டு கட்டுப்படுத்தி நடத்திச் செல்பவர்" என்று பொருள் கூற லாம். பகவானே ஸ்ரீபக வத்கீதையில் 11வது அத்யா யத்தில் 32வது ஸ்லோகத்தில் "காலோஸ்மி" என்று கூறுகி ருர். மேல்படி சொல் லிற்கு "நானே காலமாகின் றேன்" என்று பொருள். நம் மாழ்வார் 3வது பத்து-8ம் திரு வாய்மொழியில் 'சென்று, செல் லாதன முன்னிலாம் காலமே' என்றும், 7வது பத்து 2ம் திரு வாய்மொழியில் "காலச்சக்கரத் தாய், கடலிடம் கொண்ட கடல் வண்ணு கண்ணனே" என்றும் விளிக்கிருர். திரு மங்கையாழ்வார் 4ம் பத்து 3ம் திருமொழியில் "இறப்பெதிர் காலக்கழிவுமானானே" என்று குறிப்பிடுகிருர. இந்த நாமத் திற்கு ஸ்ரீசங்கராச்சாரியார் "எல் லாவற்றையும் கணக்கிடுபவர்- ஸ்ருஷ்டியிலுள்ள எல்லாவற்றை யும் கணக்கிட்டு வைத்திருப்ப வர்" என்று வ்யாக்யானம் செய் கிருர் ஸ்ரீபராசர் பட்டர்,

"குணவிசேஷங்களால் சரா சரங்களத்தனையும் (தகுந்த காலத்தில்) தம்மிடத்தில் சேர்ப் பித்துக்கொள்கிறவர்" என்று அர்த்தம் கூறுகிருர். மேற்படி தன்மையை உடையவன் எல் லாம் வல்லவனான பகவான் ஒருவனுக்கே முடியும். காலத தைக் கட்டுப்படுத்துவதென் பது அந்தப் பகவான் ஒருவ னாலேயே முடியும் என்பது எல்லா சாஸ்த்திரங்களாலேயும் சொல்லப்பட்டிருக்கின்றன.

காலத்தைக் கட்டுப்படுத்திச் செல்லக் கூடிய தன்மை ஸ்வ வனிடம் தான் இருக்க முடி யும் இறைனைப் பற்றி விளக் கம் கூறும் போது வாயு புரா ணம்

ஸர்வஜ்நதா த்ருப்தி அநாதிபோத:
ஸவதந்த்ரதா நித்யமலுப்தசகதி
அநந்ததா சேதி விபோர் விதிகு:
ஷடாஹுரங்கானி மஹேஸவரஸய

என்று கூறுகிறது.

[ஸர்வஜநதா-எல்லாம் அறிந்த வன், த்ருப்தி-பக்தர்கள் செய் யக்கூடிய சிறிய கைங்கர் யத்தாலும் திருப்தியுறுபவன், அநாதிபோத-அளவற்ற அறிவை யுடையவன், ஸ்வதந்த்ரதா-தன் னிச்சையாகச் செயல் புரிப வன், நித்தயம்-நித்யமானவன், அலுப்தசக்தி- அளவற்ற ஆற் றல் உடையவன்] மேற் கண்ட குணங்களையுடையவன் இறைவன் என்று வாயு புரா ணம் கூறுகிறது. காலத் தைக் கட்டுப்படுத்தித் தன்னிச் சையாக செயல்படக்கூடிய தன் மையை "ஸவதந்த்ரதா" என்ற குணம் மூலம் ஈஸ்வரத்தன் மையை விளக்குகிறது

இதையே பகவத் ராமானு ஜர் சரணுகதி கத்யத்தில் "ஸ்வ சங்கல்பானு விதாயி" என்று வர்ணிக்கிருர். தன்னுடைய ஸங்கல்பத்தின்ால் காலத்தைத் தன்னிச்சையாக நடத்திச் செல் லும் ஸ்வந்த்ரத்தைப்பற்றி ஸ்ரீ மஹாபாரதத்தில் வரும் இரு வ்ருத்தாந்தங்களைக் கொண்டு இங்கே கூறுவது மிகவும் பொருத்தமாக இருக்கும் பாண் டவர்களும், கௌரவரகளும் யுத் தத்திற்குப் புறப்படும் சமயம். அமாவஸ்யை அன்று யுத்தத்திற்

குப புறபபடடால் வெற்றி நிச சயம் என்று கௌரவர்கள அமா வாஸ்யை அன்று குருக்ஷேத் திரத்திற்குப் புறப்பட தயார் செய்து கொண்டிருக்கிறுர்கள்.

ஆனால் ஸர்வ வல்லமை யுள்ள பகவான் கிருஷ்ணனோ சதுர்தசி அன்றே பாண்டவர் களை "இன்று அமாவாஸ்யை திதி, இன்றே குருக்ஷேத்ரம் புறப்படுங்கள்" என்று யுத்தத் திற்குப் புறப்படச் செய்கின் றுன். பாண்டவர்களும் கிருஷ் ணனுடைய வார்த்தைக்கு மறு மொழி ஏதும் கூருமல் புறப்படு கிறுர்கள், இதை அறிந்த சூர்ய சந்த்ரர்கள் "பகவான்தானே காலத்தை நிர்ணயித்து திதி, வார, நக்ஷத்திரங்களைக் கணக் கிட்டு வைத்திருக்கிறுர் அப் படி இருகக ஸ்ரீகிருஷ்ணன் எப் படி சதுர்தசி திதியை மாற்றி அமாவஸ்யை என்று நிர் ணயிக்கலாம்" என்று வருந்தி ஸ்ரீகிருஷ்ண பகவானிடமே இரு வரும் வந்து மேற்படி சந்தே கத்தை வினவுகிறுர்கள்.

ஸ்ரீகிருஷ்ணன் புன்னகையு டன் "நீங்கள இருவரும் சேர்ந்த நாள அமாவாஸ்யை, இன்று சேர்ந்திருககிறீர்கள் அல்லவா, அதனால் இன்றுதான் அமா வாஸ்யை எனறு நிர்ணயமாகி விட்டது" என்று கூறி அவர் களை சமாதானப்படுத்தினார். இப்படி திதியை மாற்றி அதை சந்தர்ப்பங்களால் ஊர்ஜிதப்ப டுத்தும் வல்லமை அந்த பக வான் ஒருவனுக்கே உண்டென் றும காலத்தை தன் கட்டுப் பாட்டில் வைத்திருப்பவனென் றும் மேற்படி விருத்ததாந்தத் தால் புலனாகிறது

மஹாபாரத யுத்தத்தில் 13வது நாள் அரஜுனன் மகன் அபிமன் யுவை ஜயதரன் கொனறுவிட, அவனை அன்று சூர்ய அஸ்தம னம் ஆகுமுன் கொல்வதாக அர் ஜுனன் பிரதிக்ஞை செய்கிறுன். ஜயத்ரதனை கௌரவ வீரர்கள் சூழ்ந்து கொண்டு பாதுகாககி றுர்கள். மாலை நேரம் நெருங் குகிறது. அரஜுனன் சபதப்படி ஜயத்ர்தனைக் கொல்லாவிடில் தீக்குளித்து விடுவான் என்று கௌரவர்கள் மகிழந்திருக்கவும், பாண்டவர்கள் வருந்துகிறுர்கள்.

ஆஸ்ரித வத்ஸலனான கண் ணன் அங்கே தன்னைத் தோற் றுவிக்கிறுன் தன் சுதரஸன சக்ரத்தை ஆக்ஞாபித்து சூர் யனை மறைதது மாலைநேர நிலையை உண்டாக்கச் சொல் கிறுர். கோடி சூர்ய ப்ரகாசமான சுதர்ஸனம் சூர்யனை மறைதது மாலைநேர இருட்டை உண் டாக்குகிறது. ஒளியினாலே ஒளியை மறைத்து காலத்தை மாற்ற எந்த மனிதனால் சாத்யம்? அந்த ஸர்வ வல் லமையுள்ள பகவானால் மட டுமே முடியும். சூரியன் அஸ்தமித்து விட்டான் என்று ஜெயத்ரதன் தன் மறைவிடத்தி லிருந்து மகிழ்ச்சியால் தலை யைத் தூக்கி பார்கக, ஸ்ரீ கிருஷ்ணபகவான் குறிப்புப்படி அர்ஜுனன் அந்தத் தலையை அம்பால் கொய்கிறுன்.

கௌரவர்கள், அர்ஜுனன் சூர யன் அஸ்தமித்த பிறகு ஜயத் ரதனைக் கொன்று தன் சப தம் மீறினான் என்று ஆர வாரிக்க, தன் சக்கரத்தை மீட்டு சூர்ய பிரகாசத்தால் அப்போது பகல்தான், எனறு உலகோர்க்கு மெய்ப்பிக்கிறுன் கண்ணன்.

காலததைத தன கட்டுப பாட்டில் நடத்திச் செல்பவன் பகவான் ஒருவன்தான் என் பதை மேற்கண்ட வருத்தாந் தங்கள் நிரூபிக்கின்றன.

மேற்படி விருத்தாந்தங்கள் வேறொன்றையும் புலப்படுத்து கின்றன அவனுடைய சுதந் திரம்"

அந்த ஸ்வதந்த்ரம் பரிபூரண மானது. நம்மை ஏற்றுக்கொள் வதிலும் கூட அநத சுதந்திரம் தான் முதலில் நிற்கிறது இந்த குண விசேஷத்தை நம்மாழ்வார் திருவாய்மொழி 8ம் பத்து, 1ம் திருமொழி, 8ம் பாசுரத்தில்

"அறியேன மறறருள
என்னையாளும பிரானார
வெறிதே அருள செய்வர
செய்வார்கடகுகந்து"

என்று சாதிக்கிறுர்.

அதாவது அவன் அருள் செய்ய வேண்டுமென்று எவரை உகக்கின்றுனோ அவன் பாபி யாக இருந்தாலும் சரி-அ வனுககு அருள் பாலிக்கின் றுன். அதனால் நாம் அவனைத் தொழுது நிற்கின்றதை உரி மைப் பாராட்டி அருள் பாலிக் கச் சொல்லிக் கேட்க முடியாது.

அதனால் நாம் செய்யவேண் டிய இறைவன் தொழுகையை யும் துதிகளையும எந்தவித மான பலனையும் கரு தாது பகவத் கைங்கர்யமாகவே செய்து "புகலொன்றில்லா அடி யேன் உன்னடிக் கீழமர்ந்து புகுந்தேனே" என்று திருவடி யைப் பற்றுவதே நமக்கு ஸ்வ ரூபம்.



# குணவான் கோர கும்பர்

திரு. எஸ். நம்பி - பம்பாய்.

எதற்கும் ஓர் காலம் உண்டு என்பது நாம் அனுபவததில் கண்ட உண்மை இதற்கு எடுத்துக் காட்டாக மகராஷ்ட்ர மாநிலம் சுமார் 700 வருடங்களுக்கு முன், பல பக்த சிரோன்மணிகளைத் தன்னகத்தே கொண்டு சிறந்து விளங்கியது அவர்களின் பகதியும், பாடல்களும் மூலை முடுக்குகளில் எல்லாம் எதிரொலித்தன.

இக்காலத்தில் தெரடோக்கி என்ற கிராமத்தில் ஓர் மண் பாண்ட தொழிலாளியின் குடும்பத்தில் பகவான் அருளினால் ஓர் பக்தன் தோனறினான். அவர் தான் குணத்தில் சிறந்த கோர கும்பர். அவர் பெயரில் தான் கோரம் தொனித்தது. ஆனால் எநநேரமும் பகவானை நினைந்துருகும் பரம பக்தர். அவர் குணத்தில் குன்று. பக்தியில் பரம பாவமானவர் இம்மகான் ஞானேஸ்வரர், நாம தேவரின் சமகாலத்தவர். கும்பர் என்பது அவர் குடும்பப் பெயர். இது மண்பாண்டங்கள் செய்யும் பிரிவினரைக் குறிக்கும் இன்றும் பம்பாயில் கும்பர் வாடா என்ற பகுதி உள்ளது இங்கே இம் மக்கள் அதிகமாக வாழ்ந்து வருகிறுர்கள்




கும்பர், பானை உருவாக்க மண்ணைக் காலால் மிதித்த வண்ணம் பகவான் நாமத்தை பல திசைகளிலும் எதிரொலிக்கப் பாடிக் கொண்டிருப்பார். அங்கேயே ஆடுவார், பாடுவார், ஆனந்தக் கூத்தாடுவார். அவருக்கு நேரம் போவது தெரியாது. அவர் கால நேரத்திற்கு அப்பாற்பட்ட பகவானிடம் தன்னை இணைத்துக் கொண்டவர். அவர் தன்னையும், தன் உடலையும், மறந்து, இன்பத்தில் திளைத்து வந்தார்.

ஒருவருடைய வெளித்தோற்றத்தை வைத்து அவர் நல்லவரா? அல்லது கெட்டவரா? எனபதை அறிய முடியாது. அவரது நடத்தையை வைத்து வாழும வழியைக கொண்டு இதை ஓரளவு அறியலாம் அதிலும் பக்தி என்னும் போர்வைக்குள் பதுஙகியிருக்கும் பாதகரகளைக் கண்டு கொள்வது இன்னும் சிரமம் இப்படிப்பட்ட வேஷதாரிகளைக்

கண்டு படித்து, அவர்களுக்கு அறிவூட்டி அவர்களைக் ஆக்கப் பாதையில் சேர்க்கப் பாடுபட்டார் கோர கும்பர். நோய்களை அறிய பலவித சோதனைகளை செய்வதை போல், பக்தியில் பக்குவப் பட்டவரா இல்லையா என்பதை அறிவதற்கு ஓர் அற்புதமான சோதனை செய்து வந்தார். தான் பிசையும் மண்ணை அவர்களின் முகத்தில் பூசுவார். அது அன்னாரின் ஞான, பக்தி சூட்டில் தகித்து வெந்து விடும். அம்மண் எந்த அளவுக்கு வெந்திருககிறது என்பதை வைத்து தன் மண் பாண்டங்களில் வெந்தது, அரை வேக்காடு, வேகாதது என்று பிரிப்பதைப் போல் பலவாறுக பக்தர்களையும் தரம் பார்த்துப் பிரித்து விடுவார். எந்த பரிசோதனைக்கும் ஓர் உதாரணம் அல்லது எடுத்துக் காட்டு தேவை. பக்திக்கு எடுத்துக்காட்டு இந்த பாமரர் கோர கும்பர். சிருங்கேரி ஆச்சார்யர் வாக்குப்படி பக்திமானாக இருக்க எந்தத் தகுதியும் தேவை இல்லை. கோர கும்பர் அதற்கு எடுத்துக் காட்டு. பக்திக்கு விளக்கம் கூறிய திருமூலர் "பக்திக்கு வித்து பணிந்துற்றப் பற்றலே" என்று கூறியுள்ளார்.

இப்பணிவு இல்லாமல் தான் நாமதேவர் பக்தர்களின் மத்தியில் பணிய வேண்டியதாயிற்று. எனவே பணிவு இல்லாதவன் பக்தனாக முடியாது. ஆகவே கிடைக்கும் பெருமைக்கும் சிறுமைக்கும் தான் செய்யும் காரியங்களே காரணமாகின்றன. இதை "பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம் கருமமே கட்டளைக்கல்" என்பார் திருவள்ளுவர்.

கும்பரது உபதேசம், "கடவுள் எங்கும் எதிலும் எப்பவும் உள்ளான். என்னிலும் உன்னிலும் உள்ளவன் எதிலும் உள்ளவன். ஆகவே உனக்கும் பகவானுக்கும் வித்யாசம் இல்லை", என்பதுதான். இதைக் கூற வந்த திருவாய்மொழி "ஆக்கையுள்ளும் ஆவியுள்ளும், அல்ல புறத்தினுள்ளும் நீக்கமின்றி எங்கும் நின்றாய" என்று மொழிகிறது. திருமூலர், "ஓம்புகின்றான் உலகு ஏழையும் உள்நின்று" என்று கூறுகிறார்.

ஒரு நாள் என்றும் போல் கும்பர் தன் காலால் மண்ணை மிதித்த வண்ணம் விண்ணை நோக்கி ஆனந்தக்கூத்தாடிக் கொண்டிருந்தார். அவரது மனைவி ஊர்ந்து விளையாடும் ஒரே மகனை பக்கலில் ஓர் மரத்து நிழலில் விளையாட விட்டு விட்டு ஆற்றில் நீர் கொணர சென்று விட்டாள். தாயைக் காணுத குழந்தை ஆசையுடன் தன் தந்தையை நோக்கித் தவழ்ந்து வந்தது. பகவானிடம் நாம் நிர்க்கதியாய் நாம் இப்படித் தான் செல்ல வேண்டும். "கோல் நோக்கி ஓடும் கொடி போல் மால் நோக்கி ஓடுதே மனம்" என்பார் ஆழ்வார் தந்தையை நெருங்கிய குழந்தை அவரை பிடிக்க முயன்று அவரது காலடியில் வீழ்ந்தது. தன்னை மறந்து பரமானந்தத்தில் இருந்த கும்பர் ஆனந்தத்துடன் வந்தணைத்த குழந்தையைக் காணும் நிலையில் இல்லை. அச்செல்வக் குழந்தையை மணணோடு மண்ணுகப் போட்டு மிதித்து துவைத்து விட்டார். பாலன் ஆனை பிடித்த அருகம் புல்லானான்.

தண்ணீரோடு வந்த தாய் தனையனைக்காணுமல் கண்ணீரோடு கும்பரைக் நோக்கி ஓடி வந்தாள். என்னே வேதனை! கும்பரின் காலடியில் மண்ணோடு மண்ணுக மகன் மண்ணீரோடு கலந்து விட்டதைக் கண்டு தாய் தடுமாறினாள். நடந்தது என்னவென்பதை சட்டெனப் புரிந்து கொண்டாள். தாயுள்ளம் அடித்து அழுதது, புரண்டது, மனது மிரண்டது. அன்பே உருவான தாயுள்ளம் பேயுள்ள மாக மாறியது. கும்பரை வாயால் வந்ததை வைதாள். அங்கே வைதேகியும் கலக்கமுற்றாள். வாயால் வைவதை விட வேறு என்ன தான் செய்யமுடியும். நிலைமையை உணர்ந்த கும்பர் தன் நிலை தடுமாறி பின் சமாளித்து மனைவியைத் தேற்றினார். ஆனால் அவளோ அதற்கப்பாற்பட்ட நிலையில் இருந்தாள். கும்பரையும் அவரது பாடல்களையும் சபித்தாள். அதோடு இனிமேல் விட்டலின் சத்தியமாக என்னை மனைவி என்ற நிலையில் தொடக்கூடாது என்ற கட்டளையும் விட்டு அதையே சத்தியமாகக் கொண்டாள்

காலச்சக்கரம் வேகமாகச் சுழன்றது. தான் எடுத்த சபதத்தின் மூலம் தன் குடும்பத்திற்கு வாரிசு இல்லாமல் ஆகி விடும் நிலை உருவாகி உளளதை நினைத்து திடுக்கிட்டாள். எனவே கும்பரை தன் பெற்றோர் இல்லத்திற்கு அழைத்துப் போய் தன் தங்கை

தாள தாரை வார்தத மாமனார் தன் மாப்பிள்ளையை நோக்கி, மூத்த மகளை எப்படி நடத்து கிறீர்களோ அதைப் போல சின் னவளையும் நடதத வேண் டும் என்று விணணப்பித்துக் கொண்டார. என்னே விதியின விளையாடடு அவருக்குக் தன் மூத்த மகளும் மாப்பிள்ளையும் கணவன் மனைவியாக வாழ வில்லை எனற விபரம் தெரி யாது மாமனாரின் விருப்பப் படியே சின்னவளையும் அப் படியே நடததுவதாக கும்பர் வாக்கு கொடுத்தார். அதன் படி அவளை மனைவியாக என்றும் தொடாமல் வாழ்ந்து வந்தார்.

விதியின் விளையாட்டில் தானும் தங்கையும் கட்டுண்டு கிடப்பதைக் கண்டு முதல் மனைவி வேதனையுற்ருள். அக் காளும், தங்கையும் சேர்ந்து இநத சபதத்திற்கு ஓர் முடிவு கட்ட திட்டம் போட்டார்கள். கும்பர் தூங்கும் சமயத்தில் இரு வரும் பக்கலில் சயனித்து அவரது கையை எடுத்து தம் மேல் போட்டுக்கொண்டார்கள். அதன் பின் அவரை எழுப்பி அவர தங்களைத் தொட்டு விட் டதைக் காரணம் காட்டி இனி மேல் குடும்பஸ்தராக வாழும்படி வற்புறுத்தி வேண்டிக் கொண் டார்கள்

பொய்ப்பேசி உயிர் வாழ் வதை விட மெய்யைப் பேசி உயிர் விடுவதையே பெரும் பாக்கியமாக கருதுபவர் கும் பர் இப்படிப்பட்டவரகளை உலகத்தில் உள்ளவர்கள ; தங் கள மனதில் தங்குவதற்கு இடம் கொடுப்பார்கள் என்பதை பொய்யா தொழுகின் உலகத தார உள்ளத்திலெலலாம் உளன்" என்று கூறியுள்ளார். எனவே தன் கை விரல்களைக் வெட்டி விட்டார் வேதனையில் வெந்த தம்பதியினர் திக்கற்ற நிலை யில் விட்டலநாதனின் சன்ன தியில் ஓர் ஏகாதசி தினத் தில் பகவானிடம் முறையிட நினைத்தனர் திக்கற்றவர்க ளுககு தெய்வமே துணை பரமன் பக்தர்களுக்கு சோதனை களைக் கொடுத்துத்தான் சுட்ட பொன்னாககி நகையாக்கி தன் னிடத்தே அணிந்து கொள்கி ருன். இது எப்படி இருக்கிறது என்ருல் தன் உடலை அறுத்து சுட்டு இம்சிக்கும் மறுத்துவன் பால் நமககு வெறுப்பு ஏற் படுவதில்லை. மாருக அவனி டம் மீளாக் காதல் கொள்கி ரேம். காரணம் அவன் செய் யும் இம்சைகள், நம் நன்மை யின் பொருட்டேயாகும் இந்த நிலையை குலசேகரத்தாழ்வார் கீழ்க்கண்ட அற்புதப்பாடலின் மூலம் நமக்கு அறிவுறுத்துகி ருர்

"வாளால் அறுத்துச்
சுடினும்மருத்துவன்பால்
மாளாத, காதல் நோயாளன்
போல் மாயத்தால்
மீளாத் துயர்தரினும்
விற்றுவக்கோட்டம்மா, நீ
ஆளா வுனதருளே
பார்ப்பன் அடியேனே!

இந்த நிலையில்தான் கும் பர குடுமபம் பணடரிநாதன் சன்னதியில் நுழைந்தார்கள் நூழைந்த கும்பர் பகத கூட டத்தைக் கண்டு கரைகாணுத பரவசமுறறுர தன்னை மறந தார. ஆம விட்டல் நாதனை மட்டும் மறக்கவில்லை. பக்தர்க ளோடு ஒன்ருகக் கலநது பாண் டுரங்கனை நினைத்து கண் ணீர் விட்ட நிலையில் தன குறைப்பட்ட கைகளால தாள வாத்தியங்களைத் தட்டி நரதத னமாடினார். இந் நிலையை பெருமாள் திருமொழி "ஆராத மனக்களிப்போடழுத கண்ணீர் மழை சோர நினைந்துருகி யேததி" என்று உரைககின்றது.

கும்பரோடு கும்பலாக நாமதே வரும், ஞானேஸ்வரரும் சேர்ந் தாரகள். பண்டரிநாதன் சன் னதி கோலாகலப்பட்டது. திவ் விய நாமங்கள் திக்கட்டும் எதி ரொலித்தன 'மண்ணிலும் விண்ணிலும் விட்டலநாதனின் நாம கீதம் நர்த்தனமாடியது. மீணடும் பெருமாள் திருமொழி மொழிவதைக் கேளுங்கள்.

"மொய்த்துக் கண்பனி
சோர மெய்கள்
சிலிர்ப்ப ஓங்கி
யிளைத்து நின்று
எய்த்துக்கும்பிடு
நட்டமிட்டெழுந்தாடிப்
பாடியிறைஞ்சி..."

இதுதான் பழுதத பக்தர்க ளின் உண்மைநிலையாகும்.

ஓ விட்டல்ா! நீயே எனக குக் கதி நீ ஒருவன் தான் என்னைத் தாங்கும் சக்தி உன் னைத தவிர நான் எங்குச செலவேன் ("எங்கும் போய்க் கரை காணு தெறிகடல் வாய் மீண்டேயும், வங்கத்தின் கூம் பேறும் மாப்பறவை போன் றேனே பெருமாள் திருமொழி)

என உள்ளம் உருக முழுமை

விட்டல்நாதனை தியானித்தார் அங்கிருந்த அத்தனை பக்தர்களின் மனதும் கும்பருக்காக பிரார்த்தித்தது ஹரிவிட்டலே! பாண்டுரங்கவிட்டலே! பண்டரிநாத விட்டலே! என யாவரும் வேண்டி நின்றனர் அவன் ஒருவனதான் நிதயம், மற்றது எல்லாம் அநித்யம் என அறிந்து நின்றுர்கள கண்களில் ஆனந்தக் கண்ணீர் கரை புரண்டது இந்நேரத்தில் ஒரு பக்தரின் குரல் உரக்கக் கேட்டது ஆம்! கோர கும்பரின் விரல்கள் மீண்டும் வளரந்து விட்டது என்று சந்தோஷத்தில் கூச்சலிட்டார். சந்தோஷத்தில் நாமதேவரின் கீரத்தனை விண்ணைத் தொடடது

மகிழ்ச்சியுற்ற கும்பரரின் பத்தினிமார்கள் பகவானிடம் தங்களுக்கும் ஓர் வழி காட்டுமாறு முறையிட்டார்கள். என்னே ஆச்சரியம்! தன் குழந்தை கர்ப்பக் கிருகத்திலிருந்து தன்னை நோக்கி தவழ்ந்து வருவதைக் கண்டு ஓடியணைத்து முத்தமிட்டு பகவானின் லீலையை எண்ணி பரவசமுற்றனர். ஆக்கலும் அழித்தலும் அவன் விளையாட்டாகும். இநத லீலையை விளக்க முடியாது, ஆனால் விளங்கிக்கொள்ள முடியும்

எல்லாம் நிறைந்த கும்பர, எங்கும் நிறைந்த இறைவனை எதிலும் ஒன்றுகக் கணடு அவனோடு இரண்டறக கலந்து நின்றுர் க்ண்டவன் விண்டதில்லை என்பது உபநிடத வாக்கு. இது ஊமையன் உணர்ந்த இனிப்பைப் போன்றது. திருமழிசை ஆழ்வார் இதை "சொல்லினால் தொடரசி சொலப்படும் பொருளும் நீ, சொல்லினால் சொலப் படாது தோன்றுகின்ற சோதி நீ.. என்று வர்ணித்துள்ளார்

கும்பர் ஞானேஸவரருடன் தீர்த்த யாத்திரையாக வட இந்தியாவுக்குச் சென்று வந்தார். ஞானேஸ்வ்ரர் மகா சமாதியான போது உடன் இருந்த பாக்கியம் கும்பருக்குண்டு இவரது பக்தியும் பாடலும் அனறும் இன்றும் பக்தரகளை பாவனமாக்கி வருகிறது இவருக்கு பகதரகளின் வரிசையில் ஓர் நிலையான இடம் உணடு. இவரது பக்தி மனிதன் தன் சக்தியால், புத்தியால் சாதிக்கமுடியாததை சாதிததது "நின்னுளேனாய்ப் பெற்ற நன்மை இவ்வுலகில் இனி யார் பெறுவார்...உன்னைக் கொண்டென்னுள் வைத்தேன் என்னையும் உன்ன லிட்டேன்" என்ற பெரியாழ்வார் வாக்குப்படி அந்த "நாமமாயிர மேத்த நின்ற நாராயணா"னை (நாச்சியார் திருமொழி) நம் நாவினால் நவின்றேத்தி அந்த பரமானந்த பக்தி பரவசத்தில் திளைதது அநத நாரணனை, பரிபூரணனை அனுதினமும் அண்டி வாழ்வோமாக!



# சங்கம் முழங்கும்

கண்ணனின் சங்கு பாஞ்சஜன்யம் என்பது அனைவருக்கும் தெரியும்.

பாரதப்போரில் பஞ்சபாண்டவர்களின் 'சங்குகளுக்கும் பெயர்கள் உண்டு.

யுதிஷ்டிரரின் சங்கு - அனந்த விஜயம்
அர்ஜுனன் சங்கு - தேவதத்தம்
பீமன் சங்கு - பௌண்ட்ரம்
நகுலன் சங்கு - சுகோஷம்
சகதேவன் சங்கு - மணிபுஷ்பகம்

**********

# வ்யஸனங்கள்

மனிதனுக்கு மேன்மேலும் ஆசையை வளர்த்து, அவனால் விடவும் முடியாதபடி, அவனை உறுதியாகப் பற்றிகொண்டு முடிவில் படுகுழியில் தள்ளிவிடும் சிலவற்றிற்குத்தான் 'வ்யஸனங்கள்' என்று பெயர. அவை காமத்தாலும் கோபத்தாலும் உண்டாவன. வேட்டையில் மிகபபற்று, குடி, சூதாடுதல், பெண்களை விரும்பல் ஆகியவை காமத்தால் வருவன. கடுஞ்சொல் கூறல், துன்புறுத்தல், பொருளை அழித்தல் ஆகியவை கோபத்தால் வருவன.

--சு. இராமலிங்கம் - புதுப்பேட்டை.

# ஸ்ரீஒப்பிலியப்பனுக்கு கல்பதித்த கவசங்கள்

திரு. வி.பி.கே. மூர்த்தி - பாபநாசம்.

தஞ்சை மாவட்டம் திருநாகேஸ்வரத்தில் எழுந்தருளியிருப்பவர் ஸ்ரீஒப்பிலியப்பன் ஸ்ரீதேவி, பூதேவி தாயாருடன், ஒன்பது அடி உயரத்தில் நின்ற கோலத்தில் எழுந்தருளியிருப்பவர்.

காணும் பக்தர்கள் அனைவரையும் மெய்மறக்கச்செய்யும் திருக்கோலம். இக்கோயிலை அனைவரும் தென் திருப்பதி என்றே அழைப்பர். திருப்பதியைப் போல திருக்கல்யாண உற்சவம் தினமும் நடைபெறுகிறது. இதைக்காணக் கண்கோடி வேண்டும்.



ஸ்தபதிகள் சங்கு, சக்கரம், கை ஆகியவைகளுக்கு கற்கள் பதிக்கிறார்கள்.

அண்மையில் இக்கோயிலில் ஸ்ரீராமநவமி உற்சவமும், பட்டாபிஷேகமும் சிறப்பாக நடைபெற்றது. நூறு இசை வித்வான்கள் சேர்ந்து பாடினார்கள். நூறு நாதஸ்வர வித்வான்கள் சேர்ந்து கச்சேரி வாசித்தார்கள். வயலின் கச்சேரி, வீணைக கச்சேரி, ஆழ்வார்களின் பாடல்கள் ஒருபுறம் என கோயில் முழுவதும் இசை மயமாகவே இருந்தது.

கோயில் பரம்பரை அர்ச்சகர்கள் ஸ்ரீமான் கோவிந்தராஜ பட்டாச்சாரியார் மற்றும் அவரது பட்டாச்சாரியார குழுவினரும், கோயிலாரும் இணைந்து இந்த விழாவிற்கு ஏற்பாடு செய்து இருந்தனர். ஆயிரக்கணக்கான பக்தர்கள் இசை மழையில் நனைந்து மூழ்கினார்கள் என்றே கூறவேண்டும்.

ஸ்ரீஒப்பிலியப்பனுக்கு கமல ரத்தினங்கள் பதிக்கப்பட்ட சக்கரம், சங்கு, ஹஸ்தம் ஆகியவைகளை மிகவும் அழகாக சுவாமிமலையைச் சேர்ந்த ஸ்தபதிகள் எஸ். கருணாநிதி, குபேரன் ஸ்தபதி ஆகியோர் அரும்பாடுபட்டு மிகவும் அழகுறச் செய்து இருந்தனர். வெள்ளியில் கவசம் செய்து நீலம், பச்சை, சிவப்பு, ரோஸ் என பல நூற்றுக்கணக்கான கற்களைப் பதித்து கவசங்களை சூரியனைப் போல் அமைத்து இருந்தனர்.

இந்த கவசங்களையும் ஸ்ரீஒப்பிலியப்பனுக்கு அணிவித்து சிறப்பு பூஜைகளை நடத்தினர். ஸ்ரீஒப்பிலியப்பனின் கருணை ஒளி கண்களைப் பறித்து, நம் ஆத்மாவுக்கு அருளையும் வழங்குவதாக இருந்தது.

“ஓம் நமோ நாராயணாய” என மனிதில் தியானித்தபடி, ஸ்ரீஒப்பிலியப்பனை துதித்து, வணங்கி மகிழ்கிறோம். *

# காரைக்கால் அம்மையாரின் இறைவாழ்வு

திருமதி. கே. தேவகி பிரகாசம்-திருப்பதி.

செயற்கரிய செயல்கள்செய்து பெருமை பெற்றவர்கள் சிவனடியார்கள். சிவனடியார்கள் சிவனைப் போற்றி வழிபடுவதற்கு இணையாக ஏன் அதற்கும் மேலாக இறையடியார்களைக் காணின் அவர்களை வணங்கி வேண்டுவனவற்றைச் செய்வதையே தம் தலையாயப் பணியாகக் கொண்டிருந்தனர். இதற்குச் சான்றாக சோற்று மடம், தண்ணீர் பந்தல், குளம் ஆகியவற்றிற்கும், தம்முடைய மழலைச் செல்வங்கள் அனைவருக்கும் சமயக் குரவரில் மூத்தவரான "திருநாவுக்கரசு" அடிகளார் திருப்பெயரையே இட்டு வந்த அப்பூதி அடிகளாரையும், தம் பிள்ளையையே அரிந்து சிவனடியாருக்கு உணவு படைத்த சிறுத் தொண்டரையும், தம் மனைவியையே சிவனடியாருக்கு அளித்ததோடல்லாமல் அவருக்குப் பாதுகாப்பு தரும் பொருட்டு எதிர்த்து வந்த தம் சுற்றத்தாரையும் தம் வாளால் எறிந்த இயற்பகை நாயனாரையும் கூறலாம் இது போலவே பெண்ணாகப் பிறந்து யாரும் பெறுவதற்கரிய பேற்றினைப் பெற்று பேய் வடிவம் தாங்கி சைவத் தொண்டு புரிந்த காரைக்கால் அம்மையாரைப் பற்றியும அவர்தம் இறை வாழ்வு பற்றியும் இங்கே காணலாம்.

"பெருமிழலைக் குறும்பர்க்கும் பேயார்க்கும் அடியேன்" என்று தம் திருத் தொண்டர் தொகையில் சுந்தரர் பெருமான் பாட அதையே ஆதாரமாகக் கொண்டு சேக்கிழாரும் தாம் இயற்றிய பெரிய புராணத்தில் இவரைப் பற்றி 24வது அடியார் வரலாறாக 65பாடல்களில் நன்கு விளக்கியுள்ளார்.

சென்ற சில நூற்றாண்டுகளில் பிரெஞ்சு அரசாங்கத்திற்கு உட்பட்டிருந்து தற்போது பாண்டிச்சேரி யூனியன் பிரதேசத்தில் மிக முக்கியமானதொரு பகுதியாக விளங்குவது காரைக்காலாகும். அவ்வூர பற்றிக் கூறும் போது,

"கூனல்வளை திரைசுமந்து
கொண்டேறி மண்டுகழி
கானல்மிசை யுலவுவளம்
பெருகுதிருக் காரைக்கால்
-பெரியபுராணம்

என்று சங்குகள் கொழித்து வளம் பெற்று விளங்கும் சிறப்பான ஊர் என்று தம் நூலில் கூறுகின்றார்

இவ்வள நகரில் உள்ள பெரு வணிகர் "தனதத்தனார்" என்பவரக்கு அவர செய்த தவத்தின் பயனாக திருமகள் - அவதரித்தது போல் புனிதவதியார் பிறநதார். இவரே பின்னாளில் காரைக்கால் அம்மையார் என்று அன்புடன் அழைக்கப் பட்டவராவார்

இவர் தளர்நடை போடும் குழந்தைப் பருவத்திலேயே பாம் பணியும் ஈசருடைய தாளிணை போற்றும் பான்மையைப் பெற்றிருந்தார் என்பதை,

"வணிகர் பெருங்குலம்
விளங்க வந்து
பிறந்தருளிய பின்
அணிகிளர்மென் அடிதளர்வுற்று
அசையுநடை பருவத்தே
பணியணியார் கழற்கடிமை
பழகிவரும் பாங்குபெறத்
தணிவில் பெருமனக்காதற்
ததும்பவரும் மொழிபயின்றே"

என்று சேக்கிழார் குறிப்பிடுகின்றார்.

மேலும் அவர் வண்டல் பயிலும் பருவத்திலும் "அண்டர்பிரான்" திருவார்த்தைகளை நாளும் கூறி சிவனடியார்களைத் தொழுது வணங்கி வளர்ந்தார்.

அம்மையார் மங்கைப் பருவம் எய்திய போது நாகைப் பகுதியினைச் சேர்ந்த வணிகரான "நிதிபதி" என்பாரின் மகன் பரமதத்தன் என்பாருக்கு மணம் செய்து வைககப் பெற்றார். தம் குடிக்கு ஒரே புதல்வியாகையால் தனதத்தனார் தம் மகளையும், மருமகனையும் தம் ஊரிலேயே ஓரிடத்தில் தங்கவைத்தார் இவ்விருவரும் அங்கு சில காலம் இன்பமாய் இருந்து வந்தனர் இக்காலத்தில் பரமதத்தனிடம் வந்த ஒருவர் இரு மாங்கனிகளைத் தர அதை அவர்

தம் இல்லத்திற்கு அனுப்பி வைத்தார்

சிறிது நேரததிற்கெலலாம இறைவன் திருவிளையாட்டே போல் ஓர் சிவனடியார் பசியோடு வர தம் இயல்பான குணததினால் புனிதவதியார்,

"நாதன்தன் அடியார்
பசிதீர்ப்பேன்"

என நினைத்து வரவேற்றூர்

அப்போது இல்லில கறிய முது சமைத்து முடியாமையால், தம் கணவர் கொடுத்த னுப்பிய கனிகளில் ஒனறினைப் படைத்து பசியாற்றி மனம மகிழ்ந்தார

இவை நடந்த பின்னர் தம் கணவர் வர அவர்க்கு உணவு படைக்கும் போது மீதம் இருந்த ஒரு கனியைப் படைத்தார அவன் அதை உண்டு மகிழ்ந்து, அதன் சுவையால் ஈரக்கப் பெற்று இன்னொன்றையும் கேட்க, அதனைக் கொண்டு வரச் சென்றூர். அபபோதுதான் இன்னுமொரு கனியை சிவன டியார்க்குப் படைத்து விட்டது நினைவுக்கு வர, தம் கணவர விரும்பிக் கேடட பொருளைத தன்னால படைக்க முடியவில்லையே என எண்ணி மிக வருந்தினார் ஆயினும் மனம தளராது இறைவனை மனங்க சிந்து வேண்ட இறைவன ஒரு கனியைக் கொடுத்து அருளினார்

உடனே அம்மையார் மிக மகிழநது அதைக் கணவருக்குப படைததார் அதை உணட கணவன் தான உண்ட முதல் கனியினை விட இரண்டாவது கனி மிகச சுவையாக இருப்பதை அறிநது வியப்புற்றூன பினனர் அமமையாரிடம "இது முன்வைதத கனியின வகையன்று இதனை நீ எப்படிப பெற்றூய?" எனக கேட்டான் உடனே அமமையாரும தம் கணவரிடம் பொய் கூறுவது கற்புடைய பெண்களுககு இழுககு என்பதை உணர்ந்து இதுவரை நடந்ததைக கூற, அவன் நம்பாமல் 'அபபடியாயின் என முன்னே இதனைப போல் இன்னுமொரு கனியைப் பெற்றுத்தருக' என்றூன.

இதனைக் கேட்ட அமமையார சற்றும் மனம் சோர்வடையாமல்

"ஈங்கிது அளித்தருளீரேல்
என்னுரை பொய்யாம்"

எனறு இறைவனுக்கு உரைகக, இறைவர உடனே ஒரு கனியை அளித்தார் இதைக் கணடு அதிசயிதத கணவன் அதனை வாஙக அவளது கைக ளில் இருநது அது மறைந்தது இதனால் அஞ்சிய பரமதத்தன் "நான் இனிக கடல மீது கப்பலில் சென்று அயல நாட்டில் வாணிகம் செயது பெருநிதி கொணர்வேன" எனறு சொனனான பணம சேர்ந்த பின் தன்மனைவியிடம் வராமல் பாணடி நாட்டில ஒரு பட்டினத்தைச் சேரநது தஙகினான (இது பொருநையாறு கடலோடு கலக்குமிடத்தில் உளள கனகலம என்ற ஊர எனறு வடமொழியில பிரமமாணட புராணம கூறுகிறது எனறு கூறுவர) அங கேயே அவன ஒரு வணிகனின மகளை மணநது ஒரு மகளையும் பெற்றூன் அமமகளுக்குத தன் முதல் மனைவியின பெயரையே அவள்மேல் தான வைத்த பய பக்தியின் காரணமாக வைத தான்

இநத விவரங்களைக கேள்வியுறறவரகள் அம்மையாரின் உற வினரிடம் கூற அவரகள் அம்மையாரை ஒரு பல்லக்கில் ஏற றிக் கொண்டு அவ்வூர் சென்று தாங்கள வநதிருப்பதை அவனுக்கு அறிவிததனர

அவனோ தானும், தன மனைவி, மகளுடன் நேரே அமமையாரிடம வந்து காலில் விழுந்து "யான் உனது அருளினால வாழ்வேன்" என்று கூறினேன இதனால அம் மையார அச்சஙகொண்டு சுற் றத்தாரைச சேர, அவரகள கோபததுடன அவள கணவரைப பாரதது "ஏன் அவளை வணஙகினாய" எனக கேடடனர. அவனும் அதறகு முன நடநததைக கூறி "நீங்களும் பணிமினகள" என்றூன அவன் வாரததையைக கேட்ட அம்மையார் என உடல நாயகனாகிய கணவனே எனனை வணஙகி விடட போது இனி எனக்கு உயிர நாயகனாகிய இறைவனின பணியே சிறந்தது என றெண்ணி,

"ஈங்கிவன் குறிதத கொளகை இது,

இனி இவனுக்காகத

தாஙகிய வனப்பு நினறதைப

பொதிகழிததிஙகுனபால்

ஆங்கு நினறூரகள் போறறும்

பேய்வடிவு(வு) அடியே னுக்கு

பாங்குற வேண்டும்"

என்று பரமனதாள் பரவி நின ருர்

உடனே மன்றத்தில் ஆடும எம்பெருமான் அருளால "ஊனுடை வனப்பை யெல் லாம் உதறி ஏறபுடம் பேயாக விண்ணும் மண்ணும் விளங் கும பேய்வடிவம ஆனார்" இவர் இறைவனைப் பற்றிப் பாடுவதறகும் அவன பணி செய்வதறகும தன் எழிலான மேனியுடனே இருந்திருககலாம ஆனால் அவன வணககத்திற கெனறு ஆன பினனர மறறவர களின பாரவைககும தேவை யில்லை எனற இவரது நிலை இவர்தம கறபின் திறததைக காட்டுவதாக உள்ளது

மேலும, இவர் இறைவனி டம மாஙகனிகள கேடடபோ தெலலாம கொடுததது்ம், பேயு டம்பு கேடட போது கொடுத ததும், மறறவறகு சோதனை தநது பிறகு ஏற்றுக கொள ளும் இறைவனுககு இவர் மேல இருநத அனபின் மிகுதியைக காட்டுவகாகும

பிறகு இறைவன அருளால பெறற ஒருமை ஞானததினால,

"பொற்புடைச் செய்யபாத
புண்டரீகங்கள் போற்றுங்
நற்கணத்தில் ஒன்ருனேன் நான்"

என்ற பொருள செறிந்த அறபு தத் திருவநதாதி எனும் நூலைப பாடினார் இதனுள,

"பிறந்து மொழிபயின்ற
பின்னெல்லாம் காதல்
சிறந்து நின் சேவடியே
சேர்ந்தேன்-நிறந்திகழும்
மைஞ்ஞான்று கண்டத்து
வானோர் பெருமானே
யெஞ்ஞான்று தீர்ப்ப திடர்"

என்று தான் பிறந்ததிலிருந்து இறைவனையே நினைத்து அவன புகழ்பாடியே இருந் ததை இநநூலில் பாடி உள்ளார்

மேலும் மலங்களைக களைந்து உயிர்களைக காக் கும் கருணையாளன சிவபெ ருமான அவனையடைந்து உய்தல கடன் எனறு தமது நெஞசுக்குக கூறுவதாக "திரு விரடடை மணிமாலை" என்ற நூலையும் படைத்துள்ளார்

"உத்தமராய் வாழ்வா ருலந்தக்கால்
உற்ருர்கள்
செத்த மரமடுக்கித் தீயாமுன்
உத்தமனாய்
நீளாழி நஞ்சுண்ட நெய்யாடி
தன்திறமே
கேளாழி நெஞ்சே கிளந்து"

என்ற பாடல இதை விளக் கும.

இவவாறு கயிலை நோக கித தலயாததிரைச் செல்லும போது பாடியவாறு சென்ற வர கயிலை அருகில் சென்ற தும இறைவனுககுரிய இடத் தில் தாம தம் காலினால் நடப் பது அவருககுத தான செய் யும மரியாதையாகாது என் றெண்ணி, அதைத தவிரததுத தம தலையாலேயே நடகக, இதனைக கண்ணுற்ற பாரவதி தேவியார் அதிசயித்து தலை யினால் நடககும இவ்வென் புடமபின் அன்பென்ன?" எனக் கேட்க அபபோது அதறகு ஆதி யும அந்தமும இலலாத இறை வனே "வருகின்றவள் நம்மைப் பேணும் அமமையே காண்" என்று உரைததார

இதைக் கேட்ட அம்மையார் உருகி 'அபபா' என அழைத்து இறைவர் பாதம் பணிகின ருர் இறைவன் அப்போது "நம்பால் இஙகு வேண்டுவ தென்னை" எனககேட்க,

"இறவாத இன்ப அன்பு வேண்-
டிப்
பின் வேண்டுகின்ருர்
பிறவாமை வேண்டும் மீண்டும்
பிறப்புண்டேல் உன்னை
யென்றும்
மறவாமை வேண்டும் இன்னும்
நான் மகிழ்ந்து பாடி
யறவா நீயாடும் போதுன்
அடியின் கீழிருக்க"

என வேணடுகின்ருர்

அதற்கு இறைவரும தம்மு டைய திருநடனததைத திருவ லங்காட்டினில காட்டி ஆனந் தம சேரத்து பாடுமாறு அம் மைக்கு அருள் புரிநதார்

அமமையும் திருவாலங்காட் டினில் அகிலாண்ட நாயக னாம் இறைவனின பெருந கோலததினைக காணும போது தலததைப பறறியும அங்கு ஆடும் பேயகள பற்றியும பெண் பேய எனும பொருள் கொணட "கொஙகை திரங்கி" என்று தொடங்கும் ஒரு பதிகம பாடி யுள்ளார. இதுவே "அமமை மூத்த திருப்பதிகம" எனப்படும்

# ஆசார்ய வைபவம்

மோர்ட்சத்தில் எம்பெருமான் அநுபவிப்பதற்கு விஷயமாயிருக்கிறது ஜீவாத்ம ஸ்வரூபம். அதை அநுபவிப்பவன் ஸர்வேச்வரனான ஸ்ரீமந்நாராயணன். அறிவின்மை முதலான குற்றங்களால் தூய்மையற்றிருக்கும் அந்த ஜீவாத்மாவிற்கு உண்மையறிவை உபதேசித்து, தூய்மையை உண்டாக்குபவன் ஆசார்யன்.

ஆசார்யன் செய்பவையாவது சீடனால் அறிய முடியாத அர்த்தங்களை அறிவிக்கை. எம்பெருமான் திறத்து கைங்கர்யங்களில் ருசியை வளர்க்கை.

ஆசார்யனானவன் அறம் பொருள் இன்பம் வீடு ஆகிய நாலு உறுதிப் பொருள்களில் பொருள் இன்பங்களில் ஆசையை அறுத்து உயர்ந்த அறமாகவும் வீடு பேற்றைத் தருவதுமான பகவத் பாகவத விஷயங்களில் ஆசையை உண்டாக்குகிறவன் ஆவான்.

உடலே உயிராகக் கருதும் அகங்காரத்தை விட்டு, தன் சுவேச்சையாகிற சண்டித்தனத்தை விட்டு, பிறர்க்கு அடிமையாய் இருக்கும் தன்மையை விட்டு, அவன் உள் உறையும் எம்பெருமானின் உள்ளுறை நிலைக்கே அற்றுத் தீர்த்து அர்ச்சாவதாரமான பெருமாளை அடைந்து, பரமபதம் சென்று பேரானந்தத்தைப் பெறத் தகுதியுள்ளவன எவனோ அவனே ஆசார்யனுக்கு உள்ள நிறைவை உடையவனாவான். இந்த நிறைவில்லாதவன் ஓர் ஆசார்யனுக்கு அடிமைப்பட்டவனாயிருந்து பிறகு உலகுக்கெல்லாம் குரு என்ற பேரைச் சுமந்து கொண்டு தன் சீடர்கள் கொடுக்கும் பணத்துக்காக அடிமைத் தொழில் புரிகிறவனாவான் மூன்று காரணங்களைக கொண்டு ஆசார்யன் முக்கியமாவான்.

1. அறியாத அர்த்த பஞ்சகங்களை (ஐந்து பொருள்களான இறைநிலை, உயிர்நிலை, நெறி, தடை, பேறு) அறிவிப்பது
2. நல்ல அனுட்டானததை உபதேசிப்பது.
3. எம்பெருமானைத் தக்க நெறியாக - உபாயமாககக காட்டிக்கொடுப்பது

ஆதாரம் வாரததாமாலை
வாரத்தைகள 142, 143,144, 153, 158

--மா. வரதராஜன்

"எட்டியிலவ மீகை சூரைகாரை
படர்ந்தெங்குஞ்
சுட்ட சுடலை சூழ்ந்த சேர்ந்த
குட க் கௌவ
பட்ட பிணங்கள் பரந்த காட்டிற்
பறைபோல் விழிகட்பேய்
கொட்ட முழவங் களிபாடக்
குழகனாடும்மே"

என்று இறைவன் ஆடும் திரு நடனத்தைப் பார்த்து ஒரு பதிகம பாடினார்

இவ்வாறு அம்மையார் வாழ்க்கையின் ஆதிமுதல் அந்தம் வரை இறைவனின் திருநாமமும் அவன் அடியவர் பணியுமே நிரம்பி, கேட்பவர் பக்தியில் மெய் சிலிரக்கும படியாக இருநது வாழநது இறைவனுடைய அடியில் என்றும் இருக்கும் அருட் பேறு பெற்றார்.

இவர் பிறந்த ஊராகிய காரைக்காலில் இன்றும் நம் அம்மையாரின் இறை வாழ்வுக்கு அடிப்படையான "மாங்கனித் திருவிளையாட்டு" நடநத நாளை "மாம்பழத் திருநாள்" என்று போறறிக் கொண்டாடுகின்றனர்.

திருவாலங்காட்டிலும இவர் நினைவாகத திருவிழாககள் எடுக்கபபடுகின்றன.



# திருவாழியாழ்வான்

திரு. கே. பிச்சுமணி அய்யங்கார் - ஸ்ரீரங்கம்.




ஆழ்வார்கள் மற்றும் ஆசார்யர்களால் பக்திக்கடலில் ஆழங்காற்பட்டு வழிபட்டு வந்துள்ள வைணவத்தலங்கள் நூற்றெட்டு ஆகும் அவற்றில மிகவும் முக்கியமானவைகளாகக் கருதப்படும தலங்கள ஸ்ரீரங்கம், திருமலை, காஞ்சீபுரம், திருநாராயணபுரம் என்பன ஆகும இதத லங்களில ஒவ்வொரு வருடமும ஆனிமாதம சிததிரை நடசத திரத்தனறு திருவாழியாழவான் எனற ஸ்ரீசுதரசன சகர ராஜனது உத்ஸவம் கொணடாடப் படுகிறது எனவே திருவாழியாழ்வானது கல்யாண குணங்களை "ஸப்தகிரி" மூலம் நாம் அனுபவிதது ஏழுமலையானது இன்னருளைப் பெறுவோமாக.

நமது "உடையவர்" என்ற ஸ்ரீராமாநுஜாசாரயார் அருளிச் செய்தபடி சித்து, அசித்து, ஈச்வரன என்ற மூன்று தத்துவஙகளையும் யாவரும் ஒப்புக்கொள்கின்றனர் சித்து, அசித்து இரண்டையும சரீரமாகக் கொண்டு ஈச்வரன அந்தரயாமியாக அதாவது எலலாப்பொருட்களிலும் நீக்க உலகங்களைக் காத்து எல்லோருக்கும் அருள் செயவதில் அந்த ஸ்ரீமந நாராயணனுககு ஐந்து ஆயுதங்கள உதவி புரிகின்றன அவையாவன ஸ்ரீசுதர்சநம் என்ற சக்கரம், பாஞ்சஜந்யம் என்ற சங்கம், கௌமோதகீ என்ற கதை, நந்தகம் என்ற வாள், சார்ங்கம் என்ற வில்.

ஐந்து ஆயுதங்களில் தலைசிறந்ததாகக் கருதபப்படுபவன்தான் திருவாழியாழ்வான். "ஜ்யோதி" ரூபமாக உள்ள இவ்வுலகில் விருஷபம், கந்யா, மகரம் முதலிய மூன்று ராசிகளுக்கும் சோதிடர்கள் முக்கியத்துவம் அளித்துள்ளனர். விருஷப ராசியில் கண்ணன் அதாவது ஆலமாமரத்தின் இலைமேல் ஒரு பாலகனாய், ஞாலமேழும் உண்ட அரங்கத்தரவணையான் ஆன பெரியபெருமாள் ரோஹிணி நட்சத்திரத்தில் பிரகாசித்து நமக்கு அருள் செய்கிறான்.

கன்யா ராசியில் உயர்வற உயர்நலம் உடையவனான ஸ்ரீவரதராஜன் காஞ்சீபுரத்தைத் தனது திருப்பதியாகத் தெரிந்தெடுத்து ஹஸ்த நட்சத்திரத்தில் நம்மை அநுக்ரஹிக்கிறான்

இதே போன்று மகர ராசியில் அகலகில்லேன் இறையும் என்று அலர்மேல்மங்கையுறை மார்பனான திருவேங்கடமுடையான், திருமலையைத் திருப்பதியாகக் கொண்டு திருவோண நட்சததிரத்தில நம் மெலலோரையும் தன்னடிக்கீழ் அமர்ந்து புகுந்து ஆனந்திக்கும்

அருள்பாலிக்கிறுன்.

இந்தத் திருப்பதிகளில் "லக்ஷ்மீ நாராயணன்" ஆக இருக்கும் திருமாலுக்கு கைங் கர்யம் செய்வதே தன் ஸ்வரூ பம் என்று திருவாழியாழ்வான் தனது பதினாறு திருக்கரங்க ளாலும் பக்தர்களையும் அநுக் ரஹிக்கிறுன்.

திருவாழியாழ்வானுக்கு ஆயி ரக்கணக்கான கிரணங் கள் உண்டு. "ஸஹஸ்ரநாமம்" என்று சொன்னாலே பொது வாக விஷ்ணு ஸஹஸ்ரநாமத் தைத்தான் குறிக்கும். திருவாழி யாழ்வானது திருமந்திரத்திலும் ஸஹஸ்ர என்ற சொல் முக்கி யத்துவம் பெற்றதாகும். (1) நாம் சுவாசிக்கும் மூச்சுக்காற் வையிலும் (3) கைகளின் ஒவ் வொரு அசைவிலும், (4) இத யத்துடிப்பிலும் (5) ஊணிலும் உறக்கத்திலும் (6) கால்களின் ஒவ்வொரு அசைவிலும், ஆக இவ்வாறு, ஆறு விதமாகத் திரு வாழியாழ்வான் நம்மைப் பாது காத்து வருகிறுன்.

ஸ்ரீரங்கம் கூரநாராயண ஜீயர் ஸ்வாமிகள் தாம் அருளிச்செய்த "ஸ்ரீசுதர்சந சதகம்" என்ற நூலில் திருவாழியாழ்வானது வைபவத்தைப் பரக்கக் கூறியுள் ளார்கள். வைணவர்கள் பல ரும் தமது பெயர்களுக்கு முன் "ஸ்ரீ உவே." என்ற அடைமொழி யைச் சேர்த்துக் கொள்கிறுர்கள். உவே. என்றுல் உபய வேதாந் தங்களை அறிந்தவர்கள் என்று மொழி, வடமொழியிலுள்ள வைணவ நூற்களைக் கற்றறிந் தவர்கள் என்று பொருள் பல ரும் திருவரங்கத்தமுதனார் அரு ளிச்செய்த 'இராமாநுஜ நூற்றந் தாதி'யையும் ஸ்ரீகூரநாராயண ஜீயர் அருளிச்செய்த 'ஸ்ரீசுதர் சந சதகத்'தையும் கற்றுணர்ந்து பக்திக்கடலில் ஆழங்காற்பட்டு ஆனந்திப்பார்கள். ஆகவே வைணவர்களுக்கு முக்கியமாகக் கருதப்படும் ஐந்து ஸம்ஸ்காரங் களில் அவர்களது தோள்களில் சக்கரத்தையும் சங்கத்தையும் 'ஸமாச்ரயணம்' என்று முத்தி ரையிடுவார்கள்.

இவ்வுலகம் திருவாழியாழ்வா னது திருக்கையில் விளங்குகி றது. சோதிட நூற்படி மேஷம் முதல் கன்னி வரையிலுள்ள ஆறுராசிகளிலும், சக்கரத்தாழ் வாரது அருளொளி படர்கிறது. துலாம் முதல் மீனம் வரையி லுள்ள ஆறு ராசிகளிலும் அவ னது ஆறு உறுப்புக்களாகக் கருதப்படும் (1) ஜ்வாலை (2) நேமி (3) அரம் (4) நாபி (5) அக்ஷம் (6) புருஷன் பிரகாசித்து நிற்கின்றனர்.

இவ்விபவ ஆண்டில் சித்திரை நட்சத்திரத்திற்கு குரு பகவா னின் மங்களகரமான திருஷ் டியும் ஏற்படுவதால் வைணவர் கள் அனைவரும் இந்நாளில் திருவாழியாழ்வானது திருவடி களைப் போற்றிப் பணிந்து "யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்று சமநோக் குடன் சாந்தி பெற வேண்டு மென்று வேங்கடவனது திருவ டிகளில் மனமெய்மொழிகளால் பிரார்த்திக்கிறேம். *

## தியானம்

பாரத தேசத்தில் ஒவ்வொருவருக்கும் தற்காலத்தில் நலல தியானம், உணவைக்காட்டிலும் இன்றியமையாதது. சோற்றை விட்டாலும் விடு; ஒரு தனியிடத்தே போய் இருந்து உயர்ந்த சிந்தனைகள், அமைதி கொடுக்கக்கூடிய சிந்தனைகள், துணிவும், உறுதியும் தரக்கூடிய சிந்தனைகள் பலம் தரக் கூடிய சிந்தனைகள் இவற்றுல் அறிவை நிரப்பிக்கொண்டு தியானம் செய்வதை ஒருநாளும் தவறவிடாதே

பரிபூரண விருப்பத்துடன் தியானம் செய். சோர்வும் அதைரியமும் விளைவிக்கத்தக்க எண்ணங்களுக்கு இடம் கொடாதே ஊற்றிலிருந்து நீர் பெருகுவது போல, உனக் குள்ளிருந்து தெளிந்த அறிவும், தீரத்தன்மையும், சக்தியும் மென்மேலும் பொங்கிவரும். உன் இஷட சித்திகள் எல்லாம் நிறைவேறும். இது சத்தியம். அநுபவத்திலே பார்.

-பாரதியார்

திருமதி. கமலா மாரியப்பயன் - கோவை.

*****

# நம்பெருமான் நமக்கு அருள்தான் செய்வானே!

திரு. ஏ. ஸ்ரீராமுலுதேசிகன் - புதுச்செந்நெல்குளம்.

'என் நெஞ்சத்து உள் நுழைந்தான் அவன். இங்கே பெருமையுடைய தமிழ் பிரபந்தமாகிய இத்திருவாய்மொழியை நான் வெளியிடுமாறு தானே வாய் திறந்து அருளினான் அவன். கொடிய உள்ளம் கொண்ட இரணியன் மார்பைப் பிளந்து கொன்ருன் அவன். மண்ணுண்ட மன்னரெல்லாம் அஞ்சும்படிப் பாரதப்போர் நடத்தினான் அவன். பாண்டவர்களைக் காக்க, கொடுத்த வாக்கினை மீறி ஆயுதம் எடுத்தவன் அவன். அவன்தான், திருவாட்டாறு என்ற அருள்மிகு திருக்கோயிலில் எழுந்தருளியுள்ள எம்பெருமான்' என்கிருர் ஆழ்வார்.

அவன் மேலும் மேலும் நமக்கு அருள் செய்வதற்காக விருப்பங்கொண்டுள்ளான் என்று தமது நல்ல மனதிடம் மேலும் கூறுவார்.

'என்னெஞ்சத்து உள்ளிருந்து இங்கு
இருந்ததமிழ்நூல் இவை
மொழிந்து
வன்னெஞ்சத்து இரணியனை
மார்விடந்த வாட்டாற்ருன்
மன்னஞ்சப் பாரதத்துப் பாண்ட-
வர்க்காய்ப் படைதொட்டான்
நன்னெஞ்சே! நம் பெருமான்
நமக்கு அருள்தான் செய்வானே.
(10.6.4)

இரண்யன், சரண்யன் (கடவுள்) இல்லை என்று கூறவில்லை. 'நானே சரண்யன்' என்றுதான் கூறினான். அத்தகைய கொடிய உள்ளம் உற்பத்தியானது 'யான்', 'எனது' என்ற பற்றுக்களால். இரணியனைக் கொன்ற செயல்-ஆழ்வாரது அகப்பற்று புறப்பற்று நீக்கிய செயல்களைக் குறிக்கும்.

14ம் நாள் பாரதப்போர்ில் அர்ஜுனன் மகன் அபிமன்யுவைக் கொன்றுவிட்டான் ஜயத்ரதன். அன்று மாலை நேரத்திற்குள் ஜயத்திரதனைக் கொல்லாவிட்டால் தான் அக்னியில் இறங்



விட்டான் அர்ச்சுனன். அதனை அறிந்து துரியோதனன் பாதாள அறையில் வைத்துவிட்டான் அவனை. அர்ச்சுனன் கவலையை நீக்கத் தன் சக்ராயுதத்தால் கிருஷ்ணன், பகற்பொழுதிலேயே மறைத்துவிட்டான் சூரியனை. இரவு வரவே அர்ச்சுனன் தீயில் புகமுயன்று நிறைவேற்ற ஆரம்பித்தான், தன் சபதத்தினை. அப்பொழுது கிருஷ்ணன் நீக்கி விட்டான் தன் சக்ராயுதத்தினை. மறுபடியும் பகல் வரவே அர்சுனன் உடனே கொன்றுவிட்டான் ஜயத்திரதனை.

தன்னைச்சரணடைந்த பாண்டவர்களைக் காப்பாற்றப் பகலை இரவாக்கி ஆழிப்படை தொட்டான் அந்த கண்ணனெம்பெருமான். அவனே தனது அஞ்ஞான இருளைப் போக்கித் 'தெளிவான அறிவு' என்ற பகலை தனக்கு உண்டாக்கினான் என்பதை 'மன்னஞ்சப் பாரதத்துப் பாண்டவர்க்காய்ப் படை தொட்டான்', என்ற அடியில் குறிப்புணர்த்துகிருர் ஆழ்வார்.

எம்பெருமான் தனது அகப்பற்று, புறப்பற்று நீக்கிய செயல்களை இரண்யவதத்தின் மூலமும், தெளிவான அறிவை உண்டாக்கிய செயலை பாரதப்போரில் ஆழிப்படையைத் தொட்ட செயலிலும் குறிப்பிடுகிருர். பற்றுக்ளை நீக்கித் தெளிவான அறிவை உண்டாக்கியவன் வாட்டாற்று எம்பெருமான். அவனே திருவாய்மொழியை நான் வெளியிடுமாறு ரூர ஆழ்வார்.

வேவு ஆரா வேட்கை நோய் உலர்த்திவிட்டது ஆழ்வாரின் ஆவியை. காரமர் மேனி வாட்டாற்று எம்பெருமானின் திருவுருவம் கடல் புரைய அவர் உள்ளத்துள்ளே வளர்த்துவிட்டது காதலை.

ஒரு விஷயத்தைக் கண்டபொழுது முதற்காட்சியில் முதன்முதலில் உண்டாகிற ஆசை காதல் எனப்படும். காதலுண்டான பின் அவ்விஷயத்தை அனுபவித்தாலொழிய நிற்க வொண்ணுத படியாய்த் தோன்றுகின்ற ஆசை காமம் எனப்படும். இந்த காமம் உண்டானபின் அனுபவிக்க வேண்டிய விஷயத்தில் இடையருமல் தொடர்ந்து செல்லும்படியான ஆசை வேட்கை எனப்படும் அதன்பிறகு அவ்விஷயத்தை மேன்மேலும் அனுபவித்துக் கொண்டேயிருக்குமேயொழிய விட்டுப்பிடிக்க முடியாதபடியான ஓர் ஆசையுண்டாகும். அந்த ஆசையே அவா எனப்படும்.

காதல், காமம், வேட்கை, அவா என்ற உணர்வுகள் அவிவேகிகளுக்குப் புலனின்பங்களில் ஏற்படும் விவேகிகளுக்குப் பகவானுடைய திருமேனியில் ஏற்படும். ஆழ்வாருக்கு எம்பெருமான் திருமேனியில் ஏற்பட்டது அதனால் உள்ளத்தில் அகங்காரம் அகன்றது. அழகு, மென்மை போன்ற விக்கிரக குணங்கள் அமைந்தன அதனால் தமது நல்ல மனதிடம், 'நம்பெருமான் நமக்கு அருள் கூறினார்.

நம்பெருமான் அருள்பெறுவதற்கு முன்பு, தாம் வீணுகக் காலங்கழித்தமையைப் பற்றி வருத்தப்பட்டும் கூறினார்.

"தெரிந்து உணர்வு ஒன்று இன்மையால், தீவினையோன் வாளாயிருந்தொழிந்தேன் கீழ் நாட்களெல்லாம்", என்று உள்ளங்குமுறுகிருர்.

உடல் வேறு, ஆன்மா வேறு என்ற அறிவு இல்லாமையைக் கருதி 'உணர்வு இன்மையால்' என்ருர். 'ஆன்மா' இறைவனுக்கு அடிமைபபடட பொருள் என்கிற அறிவில்லாமையைக் கருதி, 'உணர்வு ஒன்று இன்மையால்' என்ருர். பாகவதர்க்கு அடிமை என்ற அறிவில்லாமையைக் கருதி, 'தெரிந்து உணர்வு ஒன்று இன்மையால்' என்ருர்.

அகங்காரமற்ற, காழ்ப்புணர்ச்சியற்ற உள்ளமே பகவத் பக்தியின் எல்லை நிலமான பாகவத பக்தியில் ஈடுபட முடியும். ஈடுபட்டது ஆழ்வாரின் உள்ளம். 'கருமமும் கரும பலனுமாகிய காரணன், திருமணி வண்ணன், செங்கண்மால் அந்த திருவாட்டாறு திவ்ய தேசத்தில் எழுந்தருளியுள்ள எம்பெருமானே' என்பதைக் கண்டு கொண்டது.



# மணக்கால்நம்பி-ஆளவந்தார் பிரபாவம்

திரு. எஸ். கோவிந்தராஜன் - மதுரை.

முன்னுரை

மணக்கால் நம்பி ஆளவந்தாரை எப்படி ஸ்ரீவைஷ்ணவ மார்க்கத்தில் ஈடுபடுத்தினார் என்பதை நாம் இக்கட்டுரையில் காண்போமாக.

ஆளவந்தார் மணக்கால்நம்பியை முதலில் பார்த்ததுமுதல் அவருடைய ஞான திருஷ்டியை மறைத்துக்கொண்டிருந்த திரை விலகியது போலத் தோன்றிற்று. உடனே அவர் 'என்னால் ஆகவேண்டியது எதுவானாலும் செய்யத்தாயார் என்னுடைய செல்வமெல்லாம் உங்களுடையதே' என்று கூறினார்.

அதற்கு மணக்கால்நம்பி இவையெல்லாம் எனக்கு வேண்டாம். உங்கள் பாட்டனார் உங்களிடம் ஒப்புவிக்கும்படி மாநிதி ஒன்று கொடுத்து விட்டுப் போயிருக்கிருர். அதைத் தாங்கள் ஒப்புக்கொள்ளும் வரை நான் தங்கள் இல்லத்திறகுத் தாராளமாக வந்து போக உத்தரவளிக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டார். ஆளவந்தார் அப்படியே காவலர்களுக்கு உத்தரவு செய்துவிட்டு அந்த நிதி எப்படிப்பட்டது, அதை அடைவது எப்படி என்று கேட்டார். அதற்கு நம்பி 'நான் சொல்லும் நிதி அழியாதது. நெருப்பினால் எரிக்கப்படாதது, நீரினால் நனைக்கப்படாதது, இந்நிதியைப் பெறுவதற்கு மிருகபலி, நரபலி எதுவும் இடத் தேவையில்லை. சூக்ஷ்ம சக்தியுள்ள ஒரு பச்சிலையைக் கிள்ளிப்போட்டு எளிதில் கைப்பற்றிக்கொள்ளலாம்' என்ருர். இதைக்கேட்டது முதல் அந்நிதியை பெறவேண்டுமென்ற விருப்பம் அதிகமாய் எழ ஆளவந்தார் அந்நிதி இருக்குமிடம் எங்கே' என்று வினவினார்.

அதற்கு நம்பி அது 'இரண்டாற்றின் நடுவே இருக்கிறது. ஒன்றினுள் ஒன்ருக அமைக்கப்பட்டுள்ள ஏழு கோட்டைகளினாலே காக்கப்பட்டு, ஒரு இயந்திரதத்தின் மீது வைக்கப்பட்டுள்ளது. ஒரு பெரும் பாம்பு அதைச் சுற்றியுள்ளது' என்று சொல்லவே ஆளவந்தார் அந்நிதியைக் காண்பிக்கும்படிக் கேட்டுக்கொண்டார்.

நம்பியும் அன்று முதல் ஆளவந்தார்க்கு பகவத்கீதையின் ரகசியங்களைப் போதித்தும் பிரபக்தியைப் பற்றிப் பேசும் சரம ஸ்லோகத்தை உபதேசித்தும் வந்தார்.

பக்தி முதிர்ந்தது

மிக விரைவில் ஆளவந்தார் பக்தி முதிர்ந்தவரானது கண்டு அவர் அநநிதியை ஏற்றுக்கொள்ளும் காலம் வந்துவிட்டதென்று அவரை தனியே திருவரங்கததிற்கு அழைத்துச் சென்று சயனத்திருக்கோ



ஸ்ரீவேங்கடேஸ்வரர் திருக்கோயில் - டெங்கனிகோட்டா. (ஒசூர் அருகில்)

லத்தில் இருக்கும் அரங்கநாதப் பெருமாளை காண்பித்து 'இது தான் உங்கள் பாட்டனார் வைத்துவிட்டுப்போன விலைமதிக்க முடியாத மாநிதி' என்று சொன்னார். உடனே ஆளவந்தார் அவ்விடத்திலேயே உலகைத் துறந்து சந்நியாசி ஆனார்.

பின்பு அவர் 'இவ்வுலக மாய வாழ்க்கைச் சேற்றில் அழுந்திக்கிடந்த என்னைப் பொருள் செய்து இந்த வைணவச் சீலரான மணக்கால் நம்பிகள் தாமே வந்து என்னைச் சந்தித்தார். கரும்பு தின்னக் கூலி கொடுப்பது போல தூதுளங்கீரையைத் தேடிக் கொண்டுவந்து கொடுத்து, எனக்கு தத்துவ ஞானம் உதயமாகிப் பரிபாகம் வருமளவும் காத்திருந்து "மண் தின்னும் பிள்ளைக்கு மருந்தூட்டத் தின்பண்டம்" காட்டிச் செல்லத் தாய் அழைப்பது போல உங்கள் பரம்பரைச் சொத்தாகிய நிதி இருக்கிறது. அதை வந்து கைகொள்ளுமென்றூர். அதன் கருத்து அடியேனுக்கு அப்போது ஏதோ உலகப்பொருள் என்றே தோன்றிற்று. இப்பொழுதோ அந்நிதி அனைத்துலகுக்கும் காரணமாகிய இறைவன் என விளங்குகிறது.'

'பின்பு அவரை அந்த நிதி பொன், வெள்ளி, ரத்தினத்தால் ஆனதோ என்ற கருத்துக் கொண்டு அது எப்படிப்பட்டது என்று கேட்க அவர் மற்ற நிதியைப்போல் இது அழிவதல்ல, அழியா நிதி என்றூர். அதனால் அவ் ஈசுவரனும் கிருபாதிக நித்யனுமா வானென்று பொருள் படுகின்றது. பிறகு அந்நிதியைக் கைப்பற்ற உபாயமென்னவென பலியேதும் இடவேண்டியதில்லை. பச்சிலையைக் கிள்ளிப் போட்டுவிட்டுக் கைப்பற்றிக் கொள்ளலாம் என்றூர். அக்குறிப்பு திருத்துழாயால் அர்ச்சித்தவர்களுக்குப் பகவான் சுவாதீனப்படுவான் என்றுயிற்று. பின்காடோ, மலையோ அந்நிதி இருக்குமிடமெண்ணி அது எவ்விடத்தில் உள்ளதென்று வினவ இரண்டாற்றுக்கு நடுவே என்றூர். அது தென்காவிரி, வடகாவிரியாகிய உபயகாவிரிக்கு மத்யமென்று புலப்படுகின்றது. ஏழு சுற்றுக்கோட்டையென்றூர். அது சப்தப் பிரகாரங்களால் சூழப்பட்ட திருவரங்கம் கோயில் என்று தெரிகிறது. இயந்திரத்தின் மீது வைக்கப்பட்டது என்றூர். அது ஓங்கார விமானமென்று (கோபுரம்) பொருள்படுகின்றது. பாம்பு சுற்றி இருக்கிறது என்றூர். அது சேஷசயனம் என்பதை அறிவுறுத்துகிறது. இந்த தனத்தை உமது பிதாமகனார் உமக்கு ஒப்புவிக்கச் சொன்னாரென்றூர். அது சுவாமி கைங்கர்யத்தை உள்ளிட்ட பிரபத்தி நிஷ்டையைக் கைக்கொள்ளும்படி ஸ்ரீமந் நாதமுனிகளால் நியமிக்கப்பட்டதென்பதைக் குறிப்பிடுவதாயிருக்கின்றது.'

'ஆகையால் நான் இங்கே இருந்து பகவானுக்குத் தொண்டு புரிந்து கொண்டிருக்க வேண்டுமென்பது அவரது விருப்பம் போலும்' என்று எண்ணி ஸ்ரீவைஷ்ணவ மார்க்கத்தை பரப்ப வேண்டும் என்ற சிந்தனையில் ஆழ்ந்தார்.



## பயனற்றவை

| | | | | |
|---|---|---|---|---|
| ஓரெட்டில் | எட்டாத | இளமையும் | - | 8 |
| ஈரெட்டில் | எட்டாத | கல்வியும் | - | 16 |
| மூவெட்டில் | எட்டாத | மணமும் | - | 24 |
| நாலெட்டில் | எட்டாத | மக்களும் | - | 32 |
| ஐயெட்டில் | எட்டாத | செல்வமும் | - | 40 |
| ஆறெட்டில் | எட்டாத | கீர்த்தியும் | - | 48 |
| ஏழெட்டில் | எட்டாத | தவமும் | - | 56 |
| எட்டெட்டில் | எட்டாத | சாவும் | - | 64 |

ஆதாரம்- 'ஞானவழி', என்னும் நூல்

## உன்னைத் தெரிந்துகொள்

நம்மை தெரிந்து கொள்ளாமல் வெளி உலகத்தைத் தெரிந்து கொள்ள முடியாது. நம்மை தெரிந்துகொண்ட பிறகு வெளி உலகத்தில் தெரிந்து கொள்ள ஒன்றும் கிடையாது.

-ரமணமகரிஷி

ஆதாரம் ஸ்ரீரமண வாக்குகள்

திரு. முசிறி சங்கரன்

# திருமலைச் சிறப்பு

டாக்டர் ஜா. மனுவேல் - ஆமுதலா.

உலகில் உள்ள அற்புதங்களுள் திருமலை ஒன்று எனலாம். உல கிலுள்ள மக்களின் வினைக ளையெல்லாம் தீர்க்கின்ற பரந் தாமனின் மலை இது. கருணை விளையும் ஞான மலை. ஏழு பிறப்புக்கள் கடந்தால் பரம பதம் கிடைக்கும் என்பது ஐதீகம். "அது தேவையில்லை. என் ஏழு மலைகளைக் கடந்து வந்தாலே உனக்குப் பரமானந் தமான பதம் உண்டு" என்று கூறும் எம் பெருமான் எழுந்த ருளியிருக்கும் அற்புதானந்த-பே ரின்ப-திருமலைகளே அந்த ஏழாம்.

"ஏழ்மையைக் கடக்க முடி யவில்லையா? உன்னைக் காக்க இந்த ஏழு மலை கொண்ட நான் இருக்கிறேன்' என்று அந்த திருவேங்கடத்தான் எழுந்து நிற்கிற மலைகள் அவை.

கூடாரை வெல்லும் சீர்க் கோவிந்தன் குடிகொண்டிருக்கும் அந்த திருமலைகளின் அடிவா ரத்தில் நின்று பிரமிக்கின்றோம். சேஷாசலம், வேதாசலம், கரு டாசலம், விருஷாத்திரி, அஞ்ச னாத்திரி, ஆனந்தகிரி, வெங்க டாசலம் என்றெல்லாம் நாமங் கொண்ட அந்த திருமலையின் அடிவாரத்தில் நின்று அந்த மலையின் அழகைக் காணும் போது மெய்மறந்து நிற்கிறோம்.

வாடினேன் வாடி வருந்தினேன்<br>மனத்தால்<br>பெருந்துயர் இடும்பையில்<br>பிறந்து<br>கூடினேன் கூடி இளையவர்<br>தம்மொடு<br>அவர்தரும் கலவியே கருதி<br>ஓடினேன் ஓடி உய்வதோர்<br>பொருளால்<br>உணர்வெனும் பெரும்பதந்<br>தெரிந்து<br>நாடினேன் நாடி நான்<br>கண்டு கொண்டேன்<br>நாராயணா என்னும் நாமம்

என்று திருமங்கையாழ்வார் துதித்து வேண்டியதைப் போல் நம் நெஞ்சமும் தழையத் தழை யத் துதிக்கிறது.



"பெருமானே! சதா உன் பவள வாயையே பாரத்துக்கொண்டி ருக்கிற மாதிரி உன் ஆலய வாசற்படியாய்க் கிடக்கும் வர மாவது எனக்குத் தாராயோ! உன் தெய்வீகத் திருமலையில் ஒரு செடியாய் கொடியாய் பிறக் கும் பேறுவது அருளாயோ! உன் தீர்த்தத்தில் ஒரு மீனாய் பிறக்க வேணும் கருணை தரு வாயா!" என்று குலசேக ராழ்வான் கூறுவது போன்று நாமும் எதாவது ஓர் உருவில் திருமலையில் பிறந்து அவரைச் சதா கண்டு களிக்க வேண்டும் என்ற எண்ணம் நம் நெஞ்சத் தில் தோன்றுகின்றது. அடி யார்களின் வினைகளைத் தீர்க் கும் அருமருந்தே நொடிப் பொழு தும் நினைப் பிரியாது அடி யேன் உன் பாதம் அகலாதிருக்க அருள்வாயாக!



# கடவுளின் குரல்

திரு. சக்தி தேசிகன் - புவனகிரி.

"அவனின்றி ஓர் அணுவும் அசைவதில்லை" மனிதன் ஒரு செயலை செய்ய முற்படும் போது அச்செயல் அவனால் செய்யப்படுகிறதா? அல்லது விதியின்படி செயல் ஆற்றப்படுகிறதா? என்ற வினா நம் கண்முன் எழுவது இயற்கையே! படிக்கவேண்டும், உழைக்க வேண்டும், உண்ண வேண்டும் மற்றும் உடுக்க வேண்டும் என்ற அன்றாட செயல்களை நாம் ஆற்ற வேண்டுமானால், அது மனிதனுக்கு ஆட்பட்டதாக இருக்கலாம். ஆனால் ஒருவன் எப்போதும் செல்வதைப் போல் குளியலறைக்குக் குளிக்கச்செல்கிறான். அன்று அவன் வழுக்கி விழுந்து கால் ஒடித்துக் கொள்கிறான். இச்சம்பவத்தை நாம் சற்று சிந்தித்துப் பார்க்க வேண்டும். ஆறறிவு கொண்ட நம்மால் இச்சம்பவம் நடைபெறும் போதும், சாலை விபத்து, விமான விபத்து போன்ற எதிர்பாராத விபத்துக்கள் நடைபெறும் போதும், புயல், மழை, வெள்ளம் போன்ற இயற்கை சீற்றங்கள் ஏற்படுகின்ற போதும், அவைகளை விஞ்ஞான அறிவு கொண்டு அறிந்தும் நம்மால் தடுக்கவா முடிகிறது? சமீபத்தில் ஆந்திரா மாநிலத்தில் வீசிய புயலாலும், ஈரான் நாட்டில் ஏற்பட்ட நிலநடுக்கத்தாலும் மாண்டவர்கள், வீடு வாசல் இழந்தவர்கள் எத்தனையோ லட்சம் பேர்! ஏன்? அவற்றை தடுத்து நிறுத்த எல்லா ஆற்றலும் கொண்ட மனிதன் முயல்வதுதானே?

"இவன் இச்செயல் செய்ய வேண்டும்! இவன் இந்நேரத்திற்கு இவளின் வயிற்றிலிருந்து பிறக்க வேண்டும்! இந்நாளில், இந்நேரத்தில், இப்

படி இதன் வாழ்வினை முடிக்க வேண்டும்!"? என்ற இருப்பு நிலைக்குறிப்பை (Balance Sheet) முன்கூட்டியே போட்டுதான் அவன் நம்மை இவ்வுலகிற்கு அனுப்பி வைக்கிறான் என்பதை யாரும் மறுப்பதற்கில்லை.

"கடவுளின் குரல்" "மணியோசை", "தாரகமந்திரம்" நம் மனசுக்குள் நாம் அறியும் வண்ணம் ஆண்டவன் ஒலிக்கிறான். சிலர், அதை என்னென்று காதில் வாங்கிக்கொள்ளாத செவிடனைப்போல், கண்ணுக்குப் புலப்பட்டும் பார்க்காத குருடனைப்போல், மூடனின் பேச்சையே நம்பி மனிதப் பிறவியின் தத்துவத்தை அறியாமல் காலத்தைப் பாழ்படுத்திவிடுகின்றனர். என்ன செய்கிறோம்? எப்படி சம்பாதிக்கிறோம்? என்ற வரைமுறை வகுக்காமல், இருக்கும் போதே இன்பமாய் வாழ்வது தானே வாழ்க்கை என்ற நாத்திகத்தின் கொள்கையைப் பின்பற்றி நடக்கிறான். "மனோசக்தி" என்ற ஞானத்தைப்பெற மனதினைக்கட்டுப்படுத்தி நடக்கமுற்பட்ட ஒருவனால்தான் அக்கடவுளின் குரலை தெள்ளத்தெளிவாகக் கேட்க முடியும் என்பது வரலாற்றுச்சான்று.

அக்கடவுளின் குரலின் படி நடந்து வரலாற்றில் இடம் பிடித்ததோடு இல்லாமல் ஆண்டவனின் பரிபூரண அருளைப் பெற்று, அவனிடமே ஐக்கியமானவர்களின் வரிசையில் நாம் மஹாத்மா காந்தி அவர்களைப் பற்றியும், யோகி அரவிந்தரைப் பற்றியும் காண்போம்.



ஸ்ரீ ஜலகண்டேஸ்வரர் சுவாமி கோயிலின் மூலவர் - கோலார்.

"இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் தோன்றிய தேவ தூதருடைய மறுபிறப்பாகிய மகாத்மாவே இவர்" என்று பூஜ்யர் ஆண்ட்ரூஸைப் போன்ற அறிஞர் பெருமக்கள் போற்றிப் பேசும் பேற்றினைப்பெற்றவர் நம் தேசத்தந்தை மகாத்மா காந்திஜி ஆவார்.

1868-ம் ஆண்டில் அவதரித்து, தாம் ஒரு தேவதூதனே என்பதை பாருக்குள் நிரூபித்து 1948-ம் ஆண்டில் "ஹரே ராம்" என்ற தாரக மந்திரத்துடன் தன் வாழ்வை முடித்துக் கொண்ட மகான்.

பலபேர் இன்று இவரை மறந்து கொண்டிருப்பது, தம் போல் தேச நலத்தில் அக்கரை கொண்டோரை ஆழ்ந்த வருத்தத்தை ஏற்படுத்துகிறது. "சாத்வீக எதிர்ப்பு", "பலாத்காரமற்ற ஒத்துழையாமை" இந்த இரு ஆயுதத்தைக் கொண்டு எதேச்சாதிகார அந்நிய ஆட்சியை எதிர்த்து, நம்மக்கள் எல்லா இன்பமும் பெற்று வாழ வழிவகுத்துத் தந்த உத்தம சீலர். இவ்வழி பலன் தருமோ என்பது தீவிரவாத கொள்கை கொண்டோரின் எண்ணம். ஆனால் "தர்மம் வெல்லும்" என்ற அசைக்கமுடியாத நம்பிக்கையே அவரின் மனம். இறுதியில் உலகமே வியக்கும்

# "கருடனும் பல்லியும்"

திருக்குணம் கே. நாகராஜன்

காசி க்ஷேத்திரத்திலே கௌளி என்று சொல்லக்கூடிய பல்லிகள் இருக்கின்றன. ஆயினும் அவைகள் வாய்விட்டுச் சொல்வதில்லை (ஒலிப்பதில்லை) காசியின் எல்லை 54 மைல் தூரத்திற்குள் பக்ஷிராஜனாகிய கருடன் பறப்பதில்லை இதற்குக் காரணம் பின்வருமாறு கூறப்படுகிறது

இராமர் இராவணனைச் சங்காரம் செய்து இராமேசுவரத்தை அடைந்தார். இராவணனைச் சங்காரம் செய்த தீவினை தீரும் பொருட்டுத் தம் பெயரால் இலிங்கம் ஒன்று அமைத்து வழிபடுவதற்கு எண்ணினார். காசிமாநகருக்குச் சென்று சுயம்புலிங்கம் ஒன்று கொண்டுவரும்படிக்கு அநுமரை ஏவினார் இராமபிரான் கட்டளைப்படி அனுமார் காசியை அடைந்தார். எங்கு நோக்கினும் இலிங்கஸ்தாபனமாகி இருப்பதைக கண்டார். அவருக்கு ஒன்றுஞ செய்யத் தோன்றவில்லை. யாது செயயலாம் என்று எண்ணமிட்டுககொண்டு ஓர் இடத்தில் அமர்ந்திருந்தார். அப்போது ஓர் இடத்தில் சுயம்புலிங்கம் ஒன்று இருந்தது. கருடன அந்த இடத்தில் வட்டமிட்டான். அநுமார் அதைப் பார்த்து மேலும் எண்ணமிட்டுக்கொண்டிருந்தார். அப்பொழுது பல்லிகள் நல்லுரை கூறின பலலிகளின் நல்லுரையும் கருடன் வட்டமிடுதலும் காரிய வெற்றிக்கு ஏது என்று உணர்ந்த மாருதி கருடன் வட்டமிட்ட இடத்திற்குச் சென்று பார்த்தார். அச்சுயம்புலிங்கத்தைக் கண்டார் அதனை எடுத்துக்கொண்டு புறப்பட்டார். காசியின் எல்லை 54 மைல் தூரமும் பைரவருடைய காவலுக்கு உட்பட்டது.

அநுமான் பைரவருடைய கட்டளை பெறுமல் இலிங்கத்தை எடுத்தபடியால் பைரவருக்கும், அநுமாருக்கும் பெரும் போர் நிகழ்ந்தது வரவரப் போர் கடுமையாயிறறு தேவர்கள் பலர்கூடி அநுமாரையும் பைரவரையும் சமாதானப்படுத்தினார்கள். அப்போது அநுமார் கருடன் உதவியாலும் பல்லிகளின் உரையாலும்தாம் இலிங்கத்தைக் கண்டுபிடித்து எடுத்ததாகக் கூறினார் வைரவர் கருடனும் பல்லியும தம் காவலுக்குப் பழுதுண்டாகுமாறு இடையூறு செய்தமையால் கருடன் காசி நகர எல்லைக்குள் பறக்கக் கூடாது என்றும், பல்லிகள் காசியில் இருந்த போதிலும் வாய்விட்டுச் சொல்லக்கூடாது என்றும் சாபங்கள் கொடுத்தார். அச்சாபப்படியே இன்றும் காசி நகர எல்லைக்குள் கருடன் பறபபதிலலை, பலலிகள சொல்லுவதில்லை என்பதாகக் கூறப்படுகிறது

---

வண்ணம் செய்த தேன்மலர் கோன்.

காந்திஜி அவர்கள் பல்வேறு சிந்தனையில் ஆழ்ந்து சரியான முடிவு எடுக்க முடியாத நேரத்தில் அவரின் உள்மனதிலிருந்து ஏதோ ஓர் குரல் ஆணை இடுவதைப் போல் கேட்பாராம் அக்குரல் தரும் வழியானது மிக எளிதில் அவர் காண துடித்த வினாக்களுக்கு விடையளித்து விடுமாம். அக்குரல் மிகத்தொலைவிலிருந்து கேட்பதுபோல் தோன்றினாலும், மிக அருகிலிருந்து ஆணையிடுவது போல் தான் இருக்குமாம். அக்குரல் அசரீரியின் குரலன்று. அது அவரைப் போலவே மனிதன் குரல்தான் என்று தன் சுய சரிதத்தில் எழுதியிருக்கிருர் மீளமுடியாத போராட்டம், மீள வகை காண முடியாத நிலை ஏற்படும் போது, அக்குரல் கேட்குமாம். அப்போது அவர் உடலில் நடுக்கம் தோன்றி, மின்சார சக்தி பரவுவது போன்ற நிலை ஏற்பட்டு, மனக்குமுறல் முற்றிலும் அடங்கி, மனம் சாந்தி பெறுமாம்.

இதை அவரே விளக்குகிருர். "நான் கேட்டது கடவுளின் கட்டளைதான் என்பதை நான் அறிவேன். உலகம் முழுமையும் சேர்ந்து அது கடவுளின் கட்டளை அல்ல என்று சொன்னாலும், நான் ஒப்புக்கொள்ளத் தயாராகயில்லை. இந்தத் தெய்வத்தின் குரல் எல்லோரிடமும் இருக்கிறது. எல்லோரும் அதைக் கேட்கலாம். அதற்குத் தேவை பயிற்சியும், ஒழுக்கமும், மனப்பக்குவமும்தான். நமது குறிக்கோள் மட்டும் நல்லதாக

இருந்தால் போதாது. அதை அடைய நாம் பின்பற்றும் வழிகளும் தர்மத்திற்கு ஏற்றதாகவே இருக்க வேண்டும்."

அடுத்து "கடவுளின் குரல்" வரிசையில் யோகி அரவிந்தர் அவர்களைக் காண்போம். இவருடைய வழிமுறையும், மகாத்மாவின் வழிமுறையும் முற்றிலும் மாறுபட்டாலும் இருவரும் அடைய நினைத்த குறிக்கோள் ஒன்றேயாகும். "பலாத்காரத்தை பலாத்காரத்தைக் கொண்டே முறியடிக்க வேண்டும்" என்பது இவரது கொள்கை.

ஒருநாள், அரவிந்தரை சதியாலோசனை செய்தார் என்ற குற்றம் சாட்டி லால்பஜார் போலீஸ் நிலையத்தில் அடைத்தனர். இப்படிப்பட்ட நிலையில் ஏற்கனவே யோகீஸ்வரர் கிருஷ்ணபரமாத்மா உபதேசித்த யோக நிலையை அறிந்தமையினால் அவர் உள்ளம் அப்போது இறைவனை நோக்கி "ஏன் இவ்வாறு எனக்கு தண்டனை அளிக்கச்செய்தாய்? நான் எனக்காக, என் நன்மைக்காகவா இச் செயலில் ஈடுபட்டேன்? எல்லாம் இந்நாட்டு மக்களின் நன்மையின் பொருட்டல்லவா செய்தேன்?" - என்று முறையிட்ட போது "பொறுத்திருந்து பார்" என்று அத்தெய்வீக ஒலி எழுந்ததால், மன அமைதியுற்று, நிம்மதி அடைந்தார் யோகி அரவிந்தர். அத்தெய்வீகக் குரல் யோகி அரவிந்தரிடம் "நீயே ஏற்படுத்திக் கொண்ட வாழ்க்கையிலிருந்து விடுபட முடியாமல் தத்தளிக்கிறாய். என் கடமை, என் கடமை என்று சொல்லிக் கொண்டு செயலாற்றி வந்தாய். நீ இல்லாவிட்டால் எல்லாம் கெட்டுவிடும் என்று நினைத்து வந்தாய். இப்போது என்னவாயிற்று' உன் இச்சைப்படி எதுவும் நடக்காது. என் கட்டளைப் படியேதான் நீ நடக்கவேண்டும். உன்மூலம் நான் வெறும் காரியங்களைச் செய்ய எண்ணியிருக்கிறேன். என் எண்ணம் தான் நிறைவேறும். அதற்கு உன்னைத் தயார் செய்வதற்காகவே இச்சிறையில் தன்னந்தனி அறையில் அடைத்து வைத்திருக்கிறேன்." என்று கூறி விட்டு யோகியின் கையில் பகவான் கண்ணனின் பகவத்கீதையை அளித்ததாம். இதை நான் கற்பனை கொண்டு சொலலவில்லை. யோகி அரவிந்தரே தன் சுயசரிதத்தில் இப்படிக் குறிப்பிட்டுள்ளார். அவர்கள் நம்மைப்போல் பொய்சொல்லிப் பழக்கப்பட்டவரில்லையே.

அப்போதிலிருந்து யாரை அரவிந்தர் நோக்கினாலும் அது ஸ்ரீகிருஷ்ணபகவான் போலவே தோற்றமளிக்கத் தோன்றியதாம். "நான் இல்லாமல் எதுவுமே நடக்காது" என்ற அகம்பாவம் என்னுள் ஒழிந்தது என்று யோகி அரவிந்தரே ஒப்புக் கொண்டுள்ளார்.

ஆண்டவன் என்னுள்ளும் இருக்கிறான் உன்னுள்ளும் இருக்கிறான் என்பதே யோகிகளுடைய வேதாந்தம். "வாடிய பயிர்களைக் கண்டபோதெல்லாம் வாடினேன்" என்றார் வள்ளல்பெருமான். "எங்கெங்கும் காணிலும் சக்தியடா" என்று உரைத்தார் பாவேந்தர் பாரதிதாசனார். மக்களைத் தெய்வங்களாகவே மதித்து, அவர்களுடைய தேக உபாதைகளைப் போக்கி அச்சேவையில் கடவுளைக் கண்டவர் • ஸ்வாமி சிவானந்தர். ஏழைகளின் துயர் துடைக்கும் பணியே தெய்வப்பணி என்று மனமார நினைத்து பஞ்சத்தில் துடித்த மக்களுக்கு உதவியளித்து காத்த மகான்தான் துக்காராம்.

இப்பேர்ப்பட்ட மகான்கள் கூறிச்சென்ற உபதேசங்களை நாம் ஒன்ருவது பின் பற்றுகிறேமா என்ருல் அது தான் இல்லை. செவிடன்காதில் ஊதிய சங்கு கதைதான். இனிமேலும் இக் கட்டுரையைப் படிக்கும் சகோதர சகோதரிகள் உள்ளத்தைத் திருத்திக்கொண்டு தான, தர்மமே; நம்மை, நம்நாட்டை, நம் உலகைக் காக்க வல்லது என்பதை உணர்ந்து எல்லோரும் வாழ வேண்டும் என்ற சீரிய நெறிதனைப் பின்பற்றி, எளியோரைக்கண்டு வருத்தி எடுக்காமல், அவர்களின்பால் அன்பு கொண்டு அவர்களுள்ளும் இறைவன் இருக்கிறான் என்பதை உணர்ந்து செயல்படுவதே நாம் நம் நாட்டிற்கு செய்கின்ற பெருந்தொண்டு என்று கூறி விடைபெறுகிறேன்.





# பரந்தாமன் பக்தியில் பரகாலர்

திரு. டி.ஆர். பஞ்சாபகேசன் - கீழையூர்.

பன்னிரு ஆழ்வார்களில் சிறந்தவராகிய திருமங்கையார் கி.பி. எட்டாம் நூற்றூண்டில் திருக்குறையலூரில் ஆலிநாடுடையான், வல்லித்திரு அம்மைக்கு மகனாக நள ஆண்டு காரத்திகை மாதம் வியாழக்கிழமை கிருத்திகை நட்சத்திரம பௌர்ணமி திதியில் சாரங்கம் என்ற வில்லின் அம்சமாய் அவதரித்து, திருவேங்கடம் உள்ளிட்ட நாற்பது திவய தேசங்களுக்கு மஙகளா சாசனம் செய்துள்ளார் பெரிய திருமொழி, திருவெழுகூற்றிருககை, திருநெடுந்தாண்டகம், திருக்குறுந்தாண்டகம், பெரிய திருமடல், சிறிய திருமடல் ஆகிய ஆறு பிரபந்தங்களும் பரந்தாமன் பாதங்களுக்கு பரகாலர் சமர்ப்பித்த தமிழ் மாலைகள் ஆகும்.

பக்தி வரலாற்றில் பகவானைப் போற்றிப் புகழ்ந்து, ஆடிப், பாடி, அழுது, அரற்றி எத்தனை சோதனைகள் ஏற்பட்டாலும் அவனே கதி என்று அவ்வளவு துன்பங்களையும் தாங்கிக்கொள்வதுதான் ஆண்டாண்டு காலமாக இருந்து வரும் மரபு. காளியின் தரிசனம் கிடைக்கவில்லையே என்று உயிரை மாய்த்து கொள்ள முயன்றவர் பரமஹம்சர். ஆனால் பரந்தாமனின் காட்சியைக் கேட்டுப் பார்த்து இல்லை என்றவுடன் அவனிடமே கோபம் கொண்டு அதையும் திருப்பாசுரமாக அருளியவர் திருமங்கையார் ஒருவரே. அதற்குக் காரணம் வழிப்பறித் தொழிலில் வாழ்க்கை நடத்திக்கொண்டு இருந்தவனை வலிய வந்து வல் வழக்கிட்டு தன் ஆடை ஆபரணங்களைக்

மான எட்டெழுத்துப் பெரிய திருமந்திரத்தையும் உபதேசித்த ருளி திருமங்கை ஆழ்வார் ஆக் கியது தானோ?

பரகாலர், திருஇந்தளூர் என்ற சோழ நாட்டு திவ்ய தேசத் தில் அர்ச்சாவதார மூரததி யாய் எழுந்தருளியிருக்கும் பரி மள அரங்கநாதரை தரிசிக்க வேண்டி செல்கிறுர். கண் பெறற பயனாய் பகவானைக் கண்டு, கைகளின் பயனாக நன்கு தொழுது வணங்கி நிற்க, உடனே அரங்கன் அருட்பார் வையால் நீராட்டி அன்புரை கூறி வரவேற்று வாழ்த்துவான் என்று கற்பனையில் ஆழ்கி ருர பரகாலர். ஆனால் ஆல யத்தில நுழைந்து அரங்கனை அடைந்து வணங்கி நிறகும் திருமங்கையாரை பார்ககாமல், பவளவாய் திறந்து முகமன் கூருமல் செந்தளிர்க்கரங்களால் தழுவி மகிழாமல் யோக சய னத்தில் இருக்கும் பரந்தா மனின் பாராமுகத்தால் மிகு தியான மனககலக்கத்தில் பர காலர் வாடுகிருர்; ஊடுகிருர், சினத்தால் சாடுகிருர்

"ஏ பரந்தாமா! அடியேன் உன னைக்கண்டு உய்வு அடைவேன் என்றல்லவா வந்தேன் நீயோ சரண் எனறு வந்த எனக்குக் காட்சியும் தராது இருக்கிருயே, விருப்பம் இல்லாதவரை விட்டு விலகுவதுதான் உலக இயலபு ஆனால் அதற்கு மாருக நீ என் கண்களுக்குப் புலப்ப டாமல் விலக, விலக உன் மீது நான் கொண்ட ஆசை குறை யாமல் வளர்ந்து கொண்டே இருக்கிறது அதனால் நீ கருதாது உன்னைப் போற றிப் புகழ்வதையே இயல்பாகக் கொண்டவன் நான். ஆனால் உலகத்தவர் தலைவனை அடி யார்கள் விரும்பிப் புகழ்வது இயல்புதானே என்று எண் ணுமல் "அன்பு சிறிதும் இல் லாத பரந்தாமனைப் பற்றித் திரிகிருனே பரகாலன்" என்றல் லவா பழிக்கிருர்கள உன்னைப் பழித்தாலும் பொறுக்கும் நீ உன் அடியவனைப் பழிப்பதை பொறுக்க மாட்டாயே. அது மட் டுமா, உன்னை அன்பிலலாத வன் என்று உலகோர் கூறுவது எனக்கும் பொறுக்கமாட்டாமல் உள்ளது". —இப்படி திருமங் கையார் அழுது அரற்றிப் புலம் புவதைக் கேட்டு பரந்தாமன் காட்சி தநதானா? இலலை பர காலரின் கவிமழையை பொழி யச் செய்யும் ஆசையால்தானே அவன் கண்டும் காணுமல் இருக் கிருன். ஆகையால் பரகா லரின் நீண்ட வாதத்தைக் கேட்டும் பரந்தாமன் சிறிதும் நெகிழவில்லை.

பரகாலர் மீண்டும் வாதிடுகி ருர் ஏ, பெருமானே! உனக்கும் எனக்கும் உள்ள நட்பு இப்படிப் னைப் புறக்கணிப்பாய் என்று முன்பே நான் அறிந்திருந்தால் நமது நட்பை ரகசியமாக வைத் திருப்பேன் ஆனால் இப்பொ ழுது நமது நட்பு உலகம் முழுவதும் அறியும்படி பரவி யுள்ளது. இப்படி உல கறிய உனக்கே ஆட்செய்யும் எனக்கு, பொன்னொளி மிஞ் சும் உன் வடிவு காட்டாமல் இருக்கிருயே உன் தரிசனத்தின் பெருமையையும், என் சிறுமை யையும் ஒப்பிட்டுப் பார்த்து உயர்ந்த ஞானியர்க்கே உரிய உன் மேனியை எனக்கு காட்ட மறுக்கிருயே? இவ்வாறு அடி யார்களுக்குள்ளே உயர்வு தாழ்வு காட்டுவது தகுமா?"

திருமங்கையார், இவ்வளவு தூரம் எடுத்துக்கூறியும் அரங் கன் அசரவில்லை. திருக்காட்சி அருளாத ஏக்கத்தால் ஆற்ருமை மிஞ்சி ஊடல் தோன்றி, அதன் விளைவாக அன்பு மறைந்து சீற்றம் கொண்டு நிராசை



# சாதுர மாஸ்யம

ஒவ்வொரு ஆசிரமத்திற்கும் சிறப்பான தர்மங்கள் இருக்கின் றன. அதே போல் சந்நியாசிகளுக்கும் உண்டு. அவர்கள் ஒரே இடத்தில் நீண்ட காலம் தங்கக்கூடாது. ஊர் ஊராகச் சென்று கொண்டே ஜனங்களுக்கு ஆன்மீக விஷயங்களைப் போதிக்க வேண்டும். அரசாங்க பரிபாஷையில் பொதுஜனத்தொடர்பு என்று சொல்வது போல் இதைச் செய்யவேண்டியது.

சாதுர் மாஸ்ய காலம் ஆனி மாத பூர்ணிமையிலிருந்து இரண்டு மாதம். இந்தக் காலத்தில் மட்டும் சந்நியாசிகள் ஒரே இடத்தில் தங்கலாம் என்று அனுமதிக்கப்பட்டிருக்கிறார்கள். இதில் ஒரு தத்துவம் அடங்கியிருப்பதாகத் தெரிகிறது சந்நி யாச ஆச்ரமத்தின் முக்கிய தர்மம் அகிம்சை. எந்த ஜீவனுக்கும் எவ்வித இம்சையும் செய்யக்கூடாது. சந்நியாசி நடந்தே செல்ல வேண்டும் என்ற விதிக்கும் இதுதான்காரணம். நடக்கும் போதே கவனிக்காமலே ஒரு பூச்சி, புழுவை மிதித்து விட்டால் கூட அதனால் அவற்றின் உயிருக்கு ஹானி ஏற்படாது. பாதங்க ளின் அமைப்பே அவ்விதம். பூச்சி மிதிபட்டாலும் பாதங்களின் குழைவு இடுக்குகள் வழியாகத் தப்பிச்சென்று விடும்.

மேலும், இந்த இரண்டு மாத காலம் சாதாரணமாக மழைக் காலம். மழைக்காலத்தில் பூச்சி புழுக்கள் அதிகமாக உண்டாகி, ஆங்காங்கு வழிகளில் எல்லாம் செல்லக்கூடியவை. அவை மிதிபடாமல் இருக்கவே, ஓரிடத்தில் சந்நியாசி தங்குகிறார். சாதுர்மாஸ்ய சங்கல்பத்தின் கருத்தும் இதுதான்.

அகிம்சையை அனுஷ்டிக்க வேண்டுமென்பதற்காகவே சந்நி யாசிகள் சமையல் செய்யக்கூடாதென்று சொல்லப்பட்டிருக்கி றது. சமையல் செய்யும் போது ஜலத்திலோ, விறகிலோ, காய் கனிகளிலோ இருக்கும் பூச்சிகள் இறக்க நேரிடலாம் தான்யத் திலுள்ள ஜீவன்களும் கொல்லப்படும். அதனால் கிரகஸ்தர்கள் கொடுக்கும் பிட்சையைக் கொண்டு சந்நியாசிகள் திருப்திய டைய வேண்டும். சந்நியாசிகள் பச்சையிலையைப் பறிக்கக் கூடாது. அது செடிகளின் உயிருக்கு இம்சை செய்வதாகும். சந்நியாச ஆசிரமத்தில் அக்னிக்குச் சம்பந்தமமே கிடையாது. அதனால்தான் அவர்கள் ஹோமம் எதுவும் செய்வதில்லை.

இந்த அகிம்சையும் சாதுர்மாஸ்ய விரதமும் இந்து மதம், புத்த மதம், ஜைன மதம் ஆகிய மூன்று மதங்களுக்கும் பொதுவாக உண்டு. இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன் இருந்த அசோக சக்ரவர்த்தியின் சாசனங்களிலிருந்து இது தெரிய வருகிறது.

துச் சிதறுகின்றன வார்த் தைகள்...பரந்தாமா! உன் திருமேனி, ஆசைப்பட்ட அடி யார்கள் கண்டு மகிழ்ந்து ஈடேற என்றுதான் நினைத் திருந்தேன். ஆனால் அப் படி இல்லை என்று தெரிகி றது பரமபதத்திலிருந்து திரு இந்தளூர் வந்து சேவை சாதிப் பது எதற்கோ' இத்தனைக் குப் பிறகும் நீ காட்சி தர வேண்டாம். நான் எக்கேடோ கெட்டுப்போகிறேன்".... பரகால ரின் வசைமாரியில் அதிர்ந்து போகிறான் அரங்கன். உன் காட்சி வேண்டாம். உன்திருமே னியைக் கட்டிக்கொண்டு நீயே அழு. நான் ஒருகை பார்க் கிறேன்; என்று அல்லவா திரு மங்கை கூறிவிட்டான் வியப் பால் வாயடைத்துப் போய் பரகாலர் செல்லும் திசையை யேப் பார்த்துக்கொண்டு நிற்கி றான் பரந்தாமன்....புண்ய சீலர் களே. இது சுகமான கற்பனை அல்ல. பரகாலருக்கு நேர்ந்த பரிதாப நிகழ்ச்சி. இதோ.... பெரிய திருமொழியில் உள்ள திருஇந்தளூர் மங்களா சாச னப்பாடல்....

"ஆசை வழுவாது ஏத்தும் எமக்கு இங்கு
இழுக்காய்த்து, அடியோர்க்குத்
தேசம் அறிய உமக்கே ஆளாய்த்
திரிகின்றோமுக்கு
காசின் ஒளியில் திகழும் வண்ணம்
காட்டீர் எம்பெருமான்
வாசிவல்லீர்! இந்தளூரீர்!
வாழ்ந்தேபோம் நீரே"



# அண்ணா ஸ்வாமியின் நூற்றாண்டுவிழா

திரு. கே.பி.ஆர். நரஸிம்ஹன் ஆழ்வார்திருநகரி.




2-4-1991 அதாவது பங்குனி விசாகத்தன்று காஞ்சீபுரம் பிரதிவாதி பயங்கரம் அண்ணாஸ்வாமியின் நூற்றாண்டுவிழா தமிழ் நாட்டில் பல திவ்ய க்ஷேத்திரங்களில் கொண்டாடப்பட்டது.

திருமலை-திருப்பதி தேவஸ்தானத்தின் சார்பிலும் திருப்பதியிலுள்ள கேந்த்ரீய ஸம்ஸ்க்ருத வித்யாபீடத்தின் துணை வேந்தர் ஸ்ரீஉவே. வித்வான் என்.எஸ். ராமாநுஜ தாதாசாரிய ஸ்வாமியின் தலைமையில் 30–4–1991 அன்று அத்திருவிழா கொண்டாடப்பட்டதாகவும் செய்தி அறிந்து அடியேனது மனது மகிழ்ச்சிக்கடலில் திளைத்தது.

அந்த அண்ணங்கராச்சார்ய ஸ்வாமி தென்மொழி - வடமொழிகளில் புலமை வாய்ந்தவர்; பல வாதக்கிரந்தங்களை இயற்றியவர். இயல் கோஷ்டி, வேத கோஷ்டி இரண்டிலும் ஈடுபாடுள்ளவர். ஸ்வாமி தேசிகனிடமும் மணவாள மாமுனிகளிடமும் களங்கமற்ற பக்தி உள்ளவர்; காஞ்சீபுரத்தில் நம் பிள்ளைக்கு ஸந்நிதி அமைத்து அவருக்கு அந்த திவ்விய க்ஷேத் லாத குறையைப் போக்கியவர். இதுபோன்று அவரது திருக்கல்யாண குணங்களை எழுதிக் கொண்டே போகலாம்.

ஆனாலும் அவருடைய ஸ்வாபாவிகமான அல்லது இதயத்துடன் கலந்த ஒரு நல்ல குணத்தைப் பலரும் சிந்திப்பதில்லையே என்று எமக்கு வருத்தமாகத்தான் இருக்கிறது. "வடகலையிலுள்ள வித்வான்களை வேண்டுமென்றே வம்புக்கிழுத்து வாதக்கிரந்தங்களை இயற்றினார்" என்று சிலர் குறை கூறுவதுண்டு. அவர் திருவுள்ளத்தில் ஒரு விஷயம் சரியானது என்று தோன்றினால் அதைப் பிரதிபாதிப்பதற்காக வாதக்கிரந்தங்களை நம் போன்றவர்களுக்காக அருளிச் செய்தார். அவருடன் அந்த விஷயம் பற்றி யார் தர்க்கித்தாலும் அவருக்குத் தக்க பதிலைத் தருவது ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயத்திற்குச் செய்யும் சிறந்த கைங்கர்யமென்று அந்த ஸ்வாமி கருதினார். அவருடைய திருவுள்ளத்தில் யாருக்கும் எதிராக காழ்ப்புணர்ச்சி தோன்றியது கிடையாது. வடகலை வித்வான்களோடு வாதம் செய்தது போலவே அவரது காலத்தில் பிரசித்தமாயிருந்த பல தென்கலை வித்வான்களையும் கண்டித்து வாதக்கிரந்தங்கள் இயற்றினார். காரப்பங்காடு வேங்கடாச்சாரி

ராஜய்யங்கார், ஆழ்வார்திருநகரி ராமகிருஷ்ணய்யங்கார், புத்தூர் வக்கீல் ஸ்ரீநிவாஸய்யங்கார் 'மேலநீலிதநல்லூர் பிச்சுமணி அய்யங்கார்' வேளுக்குடி வரதாச்சாரியார் போன்ற பல தென்கலை வித்வான்களோடும் வாதப்போர் நடத்தினார்; ஆனாலும் அவரது இதயத்தில் "எல்லோரும் நல்லவரே" என்ற பாவனை ததும்பியிருந்தது. "பண்டிதா ஸமதர்சிந" என்று கீதையில் கண்ணன் அருளிச்செய்தது போன்று "ஸமத்ருஷ்டியுள்ள பண்டிதர்" ஆக அவர் விளங்கினார். காஞ்சிபுரத்திற்கு எந்த வித்வான் வந்தாலும், அவராகவே சென்று வருந்தி அழைத்து உபசரித்த நிகழ்ச்சிகள் பல ஆனால் அவரோடு வாதம் செய்து தோற்றுப்போன சிலர் அவருக்கு எதிராக ஆபிசாரப்பிரயோகம் செய்தனர் என்று அந்த ஸ்வாமியே அடியேனுடைய திருத்தகப்பனாரிடம் கூறி வருந்தியிருக்கிறான் தனக்குத் தீமை நினைத்த நாலூரானுக்கும் முக்தி அருளவேண்டுமென்று பிரார்த்தித்ததுபோல அந்த ஸ்வாமியும் தேவப்பிரான் ஸந்நிதியில் அவர்களுக்காக பிரார்த்தித்து நின்றூர். திருவாழியாழ்வானிடம் மாசற்ற பக்தி கொண்ட அந்த ஸ்வாமி தன் ஆயுள் முழுவதும் ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தைப் பரப்புவதற்காகவே பாடுபட்டார்.

ஸ்ரீவேதாந்த தேசிகனுடைய திருக்குமாரராகிய நயினாசாரியருடைய திவ்ய கடாக்ஷத்திற்கும், அழகிய மணவாளப் பெருமாளுக்கே ஆசாரியனாகத் திகழும் மணவாள மாமுனிகளின் திவ்ய கடாக்ஷத்திற்கும் இலக்காகி விளங்காநிற்கும் பிரதிவாதி பயங்கர வமிசத்தில் அவதாரம் செய்த நமது ஸ்வாமி தென்கலை ஸ்வாமிகளிடமோ, வடகலை ஸ்வாமிகளிடமோ கருத்து வேறுபாடுதில் கிஞ்சித்தும் களங்கமற்றவராகவே வாழ்ந்தார். பிறரை வலிய வருத்தி உபசரிப்பதில் அந்த ஸ்வாமிக்கு ஈடாக யாரையும் கூறமுடியாது. ஆகவே தான் அந்த ஸ்வாமி 93 திருநட்சத்திரம் இந்த லீலா விபூதியில் நமக்காக எழுந்தருளி திவ்ய விபூதியைச் சேர்ந்த தேவப்பெருமாளுக்கும் கைங்கர்யம் செய்து நமக்கும் கலங்கரை விளக்கமாக விளங்கினார் என்றுல் மிகையாகாது அந்த ஸ்வாமியின் கிரந்தங்களை நல்லமுறையில் பதிப்பித்து மறுபடியும் பிரச்சாரம் செய்வதற்கு திருவல்லிக்கேணியிலுள்ள "கீதாசாரியன்" ஆசிரியராகப் பிரசித்தியுடன் விளங்கும் ஸ்ரீஉவே வேங்கடகிருஷ்ணய்யங்கார் முயற்சி மேற்கொண்டிருக்கிறூர். அவரது நற்பணி இனிதே நிறைவேறவேண்டுமென்று தாள்பரப்பி மண் தாவிய ஈசனான அலர்மேல் மங்கை மணளனை இறைஞ்சுகிறோம்

வாழ்க வைணவம்!!

"மன்னுபுகழ் மணவாளமுநிக்கன்பன்
வாழியே
மாறன் சடகோபன் மொழி
வழுவாதான் வாழியே
அன்றையிலும் அடைந்தவர்பால்
அருளுடையோன் வாழியே
அடைவுடனே வேதாந்தம்
அறிந்துரைத்தான் வாழியே
என்னையும் தன்னின்னருளால்
எடுத்திட்டான் வாழியே
இரண்டுலகில் அவன் புகழை
ஏத்துமவன் வாழியே
பன்னுகலை ஆழ்வார்கள் பதம்
பணிந்தோன் வாழியே
பரவாதி பயங்கரார் படியிலென்றும்
வாழியே

*

## விண்ணப்பம்

'ஸப்தகிரி' மாத இதழுக்கான தொகையை 'மணியார்டர்' மூலமாக அனுப்புதல் பயனுள்ளதாக அமையும். மணியார்டர் கூப்பனில் தங்கள் முகவரியினை ஆங்கிலத்தில் எழுதுவதும், பழைய சந்தாதாரராக இருந்தால் தங்கள் சரியான சந்தா எண்ணை மறக்காமல் குறிப்பதுவும் 'ஸப்தகிரி' நிருவாகப்பணியினை எளிதாக அமைக்கும். தொகை அனுப்பியும் இதழ் பெருதவர்கள், தாங்கள் எழுதும் புகார்க் கடிதத்தில் மணியார்டர் எண், செலுத்திய தொகை, அனுப்பிய தேதி ஆகிய விவரங்களுடன் தங்கள் முழு முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொண்டால் விரைவில் செயலாற்ற உதவும். சந்தாதாரர்களின் முழு ஒத்துழைப்பையும் எதிர்பார்க்கிறோம்.

--ஆசிரியர்.

# ஐந்தின் பெருமை

திரு. ஆர்.எஸ். சுப்பிரமணியம் - குடியாத்தம்.

ஐந்து திருக்கரங்களை உடையவர் விநாயகர்.

ஐந்தாவது மாதமான ஆவணியில் ஸ்ரீவினாயக சதுர்த்தியும், ஸ்ரீகிருஷ்ண ஜெயந்தியும் வருகின்றது.

அப்பு, தேயு, வாயு, பிருதிவி, ஆகாயம் என்பன ஐந்து பஞ்ச பூத தலங்களாகும்.

விஸ்வநாதம், சோமநாதம், ஜகன்னாதம், ராமநாதம், வைத்தியநாதம் ஆகியவை பஞ்சநாத ஷேத்ரங்கள்.

ஐந்து ஆரணியங்கள்- நைமிசாரண்யம், வடாரண்யம், வீஷாரண்யம், வம்ஸாரண்யம், பதிரிகாரண்யம்.

கனக சபை, இரஜத சபை, இரத்தின சபை, தாமிர சபை, சித்திர சபை ஆகிய ஐந்து சபைகளில் நடராஜபெருமான் நடனமாடுகின்ருர்.

சைவ மதத்தினர் 'சிவாய நம' என்னும் ஐந்தெழுத்து மந்திரத்தை போற்றி வணங்குகின்றனர்.

கணபதி, விஷ்ணு, சிவன், அம்பிகை, சூரியன் ஆகிய ஐவரை வணங்கும் முறைக்கு பஞ்சாயன பூஜை என்று பெயர்.

பஞ்சாக்னி என்ற ஐந்து அக்னியில் மாங்காடுஸ்ரீகாமாட்சி தவம் செய்கின்ருள்.

சீதா, திரௌபதி, தாரா, அகல்யா, மண்டோதரி ஆகிய ஐவரும் பஞ்ச கன்யாக்கள்.

கோமாதா (பசு) நமக்குத் தருபவை பஞ்ச கவ்வியம் ஆகும். அவை: 1.) பால் 2) தயிர் 3) நெய் 4) சாணம் 5) கோமியம்.

ஐந்து தலைகளை உடையவர்கள் ஆதிஷேஷன், காயத்ரி, பஞ்சமுக கணபதி, பஞ்சமுக அனுமான், பதஞ்சலி முனிவர்.



லக்ஷ்மண் ஜூலாவின் பின்னால் ஸ்வர்க்காஸ்ரமம்.
-ரிஷிகேஷ்.

ஐந்து அங்கங்களைஉடையது பஞ்சாங்கம். இவை 1) திதி 2) நக்ஷத்திரம் 3) யோகம் 4) கரணம் 5) வாரம்.

பஞ்ச பாண்டவர்களாகிய ஐவருக்கு ஸ்ரீகிருஷ்ம பகவான் துணைநின்ருர்.

பதினெட்டு புராணங்களில் ஐந்தாவது ஸ்ரீவிஷ்ணு புராணம்.

விண்ணையும் மண்ணையும் அளந்த ஐந்தாவது அவதாரம் விஷ்ணுவின் வாமன அவதாரம்.

ஸ்ரீமகாவிஷ்ணு பரத்வம், சயனம், விபவம், அந்தர்யாமி, அர்ச்சை ஆகிய ஐந்து நிலைகளில் உள்ளார்.

விஷ்ணு, புருஷன், சத்யன், அச்சுதன், அநிருத்தன் என்ற ஐந்து வடிவங்களில் ஸ்ரீமகாவிஷ்ணு 108 திவ்ய தேசங்களில் எழுந்தருளி உள்ளார்.

வைஷ்ணவத்தில் பஞ்ச ஸம்ஸ்காரம் என்பன 1) திருமண் இடுதல் 2) சக்ர தாரணம் 3) திவ்ய மந்திரம் 4) அஷ்டாக்ஷரம் 5) சரணுகதி.

திருச்சேறை என்ற ஷேத்ரத்தை பஞ்ச ஸார ஷேத்ரம் என்றும், திருக்கண்ணபுரத்தை பஞ்ச கிருஷ்ண ஷேத்ரம் என்றும் அழைக்கின்றனர்.

பஞ்சலோகம் என்ற ஐந்து வகை உலோகங்களினால் கோயில்களில் உற்சவ விக்கிரகங்கள் உள்ளன.

வைணவக் கோயில்களில், ஆகமங்களை அடிப்படையாகக் கொண்டு ஐந்து வகையான (பாஞ்சராத்ர) திருவாராதனம் நடைபெறுகின்றது.

தமிழர்களால் போற்றப்படும் ஐந்து பெருங்காப்பியங்கள் 1) சீவக சிந்தாமணி 2) வளையாபதி 3) குண்டலகேசி 4) மணிமேகலை 5) சிலப்பதிகாரம்.

பண்டைய தமிழர்கள் நிலங்களை ஐந்து வகையாக பிரித்தனர். அவை 1) குறிஞ்சி 2) முல்லை 3) மருதம் 4) நெய்தல் 5) பாலை.

பஞ்ச நதிகள் 1) கங்கை 2) யமுனை 3) கோதாவரி 4) சிந்து 5) பிரம்மபுத்திரா.

கோயில்களில் இறைவனுக்கு படைக்கும் அன்னத்தை பஞ்ச அன்னங்கள் என்பர். அவை 1) வெண் பொங்கல் 2) சர்க்கரைப் பொங்கல 3) புளியோதரை 4) தயிர் சாதம் 5) எலுமிச்சை சாதம்.

திருவையாறிலுள்ள இறைவனின் திருநாமம், பஞ்சநதீஸ்வரர்.

ஐந்தில் வளையாதது, ஐம்பதில் வளையாது என்பது ஆன்றோர் வாக்கு.

ஐந்தின் பெருமையை திருமூலர் இவ்வாறு குறிப்பிடுகின்ருர்.

**ஐந்தெழுத்து என்பது**
**ஐந்தொழில் தெய்வமாம்;**
**ஐந்தெழுத்து என்பது**
**ஐவகைப் பூதமாம்;**
**ஐந்தெழுத்து ஆக்கமே**
**அனைத்துயிர் இனங்கள்;**
**ஐந்தெழுத்து அடங்குமே**
**ஆதி பரம்பொருள்.**



**************************************

# வடமீன் போல்வாள் கண்ணீர்

திரு. கே. இராமலிங்கம் - புதுப்பேட்டை



பாஞ்சாலி துகிலுரியப்பட்ட நாளிலிருந்தே பிதாகமருக்கு மனம் உறுத்திக்கொண்டே இருந்தது. நீதியைக் கூறினால் ஏற்றுக்கொள்ளும் நிலையில் துரியோதனன் என்றுமே இருந்ததில்லை. மன உறுத்தலை அவனிடம் சொல்லி ஆற்றிக் கொள்ளும் சூழ்நிலையே அவருக்கு ஏற்படவில்லை. சொல்லியும் பயனில்லை. தம் கண்ணெதிரே பாஞ்சாலி மானபங்கம் செய்ததைக் காண நேர்ந்த இக்கட்டான சூழ்நிலையின் கைதியான பிதாகமரின் மனம் வேதனையிலிருந்து மீளவே முடியவில்லை. துரியோதனின் அந்த மாபெரும் தவறினைச் சுட்டிக் காட்டும் சூழ்நிலை உருவாகும என்று பீஷ்மர் நம்பிக்கொண்டிருந்தார். அந்த நேரமும் வந்து விட்டது.

மனம் கலங்காமல் போர் புரிந்து வந்த துரியோதனன் மனம் உடைந்தது, தனது தம்பியர் எண்மரை வீமன் ஒருசேர கொன்று குவித்தபோதுதான்.

சுந்தரன், மாகவிந்து, விசாலக் கண்ணன், வீரவாகி, பெள்துண்டன், மகோதரன், அபயன், ஆதித்தகேது என்ற எண்மரும் துரியோதனின் உள்ளத்துடன் ஒத்தவர்கள். உளம் உடைந்தவனாக குருகுலப்பேரரசரான வீடுமன் நின்ற இடத்தை அடைந்தான். வீடுமனின் சிவந்த அடிகளைத் தன் தலை மீது வைத்து வணங்குகிறான். "உங்கள் தந்தை மீது உண்டான அன்பால் ஆட்சியை உங்கள் தம்பியர்க்குத் தந்தவரே! எனக்குத் தந்தையும் நீங்களே என எண்ணியிருந்தேன். என் கண் முன்னாலேயே வாயுமைந்தன் என் தம்பியரைக் கொன்று குவித்துவிட்டான்.

நீங்கள் போர்த்தொழிலில் படைத்தலைவராய் முன்னே நிற்பதால் வாழ்வுக்கு அழிவு உண்டாகாது என்று நினைத்திருந்தேனே" என்று துரியோதனன் உடலில் உணர்வற்று, உள்ளம் வருந்தி, மலர்ந்த கண்களினின்றும் 'பொய்கையில் வெளித்தோன்றும் முத்துக்கள் போல் நீர் பெருக்கச் சொன்னான்.

அன்றுவரை பிதாமகரை நாடிச் சென்றவன் இல்லை துரியோதனன்.

"தன் பிதாமகன் செய்யத்தாள்
தனது மௌலிமேல் வைத்து"

இதுவரை வணங்காதவன் இன்று வணங்கினான். பாண்டவர் பக்கம் பிதாமகர் சாய்ந்துவிடுவாரோ என்ற சந்தேகம் அதுவரை துரியோதனனிடம் இருந்து வந்தது. வெளிப்படையாக பிதாமகரின் படைத்தலைமை பற்றிப் புகழவும் செய்யும்படி அவனைத் தூண்டியதற்குக் காரணமே அவனது தம்பியரின் சாவுதான்.

கேட்கும் நிலையில் இருந்தால்தான் சொல்பவருக்கும் கேட்கப்படுபவருக்கும் பயன் உண்டு. இதுவரை பீஷ்மரின் எந்தச் சொல்லையும் கேட்கும் நிலையில் இல்லாதிருந்த துரியோதனன் இனி கேட்கும் நிலைக்கு வந்துவிட்டான் என்பதை உணர்ந்த பீஷ்மர் அவனுக்கு ஆறுதல் கூறினார்.

"துரியோதனா! நீ சிறிதும் வருந்ாதே. உலகத்தில் எல்லாரும் பகைவர்மீது எறியத்தக்க படைக்கலத்தை எடுப்பது,



முருடேஸ்வரர் திருக்கோயில். -குந்தாபூர், கர்நாடக மாநிலம்.

போரில் வலிமை அழிந்து சாகாமல் தப்பிப் பிழைக்க ஓடிச் செல்வதற்கு அல்ல. வேல், அம்பு, வாள் ஆகியவற்றால் இயன்றவரை பகைவரைத் தொலைத்து, முடியாத பட்டசத்தில் தாமும் தலை வேறு, உடல் வேறாக விழுதலே வீரர்க்குச் செல்வமாகும்" என்று ஆறுதல் கூறியதுடன் நீதியையும் உபதேசிக்க ஆரம்பித்தார்.

"செல்வந்தர் அதைச் செலவு செய்து இன்பம் அடைவதற்கும் மற்றவர்கு அளித்தற்கும் அஞ்சமாட்டார்கள். மேன்மையான இல்லறத்தில் வாழ்பவர் விருந்தினரை எதிர்கொள்வதற்குச் சற்றும் பின்னடையமாட்டார்கள். ஞானத்தால் தத்துவப் பொருள்களை அறிந்த மக்கள், இயல்பாகப் பொருந்தும் இறப்புக்கு அஞ்சார். முனிவர், அரிய தவம் செய்வதற்கு வருந்தார். அவ்விதமே அரசர் கொலைக்கிடமான போர் செய்ய அஞ்சார்".

இருந்தனம் 'படைத்த மாக்கள்
இன்பமும் அறனும் அஞ்சார்
விருந்தெதிர் சிறிதும்ஞ்சார்
மேம்படவாழு மில்லோர்
பொருந்திய இறப்பையஞ்சார்
போதமெய்யுணர்ந்த மாந்தர்
அருந்தவம் முனிவரஞ்சார்
அரசருமடுப்போர் அஞ்சார்

-வில்லிபாரதம்
வீட்டுமப்பருவம் (255)

"அன்று நான் சொல்வதை நீ ஏற்றுக் கொள்ளும் நிலையில் இல்லாததால் அன்று சொல்லாததை இன்று சொல்கிறேன், கேள். உனக்கு முன் ஆண்ட மன்னரில் ஏவராயினும் நீதியினின்று தவறியதுண்டா? மன்னர் அவையில் நீ துச்சாதனனைக் கொண்டு செய்த தகாத செயலால் குற்றம் இல்லாத அருந்ததி போன்ற கற்பறம் பூண்ட திரௌபதியின் இரு கண்களினின்று பெருகிய நீர் இனி இத்தகைய தீமைகளை மட்டுமா தரும்?"

மன அவை தன்னில் நின்ற மாசு
இலா வடமீன் போல்வாள்
தன்னிரு கண்ணீர் இன்னம் இவை
கொலோ தருவது அம்மா"

என்கிருர் வில்லிப்புத்தூரார்.

அந்தக் கொடிய நிகழ்ச்சியை வீடுமன் நினைத்துப் பார்க்கிருர்.

பாவி துச்சாதனன் பாண்டவர்களின் முன்னிலையில் துரியோதனன் சபையில் திரௌபதியின் சேலையைக் களைந்தான். திரௌபதி தன் புடவையை அழுத்திப் பிடித்திருந்த கையை எடுத்துவிட்டு "கண்ணு! நீதான் துணை" என்று இரு கைகளையும் தலைக்கு மேலே தூக்கி வணங்கி 'அண்ணு அபயம்' என்று அபயக்கரம் வேண்டிய உடனே கண்ணன் அருள்புரிந்து கற்புடைய பெண்களின் கருணையைப் போல' துச்சாதனன் திரௌபதியின் சேலையைக் களைந்த போது அந்தச் சேலை வளர்ந்து கொண்டே இருந்தது.

கொடியவனான துச்சாதனன் கைசோர்ந்து மெய்சோர்ந்து வீழ்ந்தான்.

"ஆருகி இருதடங்கண் அஞ்சன
வெம்புனல் சோர அளகம்சோர
வேறுன துகில் தகைத்த கைசோர
மெய்சோர வேறுஓர் சொல்லும்
கூருமல் கோவிந்தா-கோவிந்தா
என்று
அரற்றி குளிர்ந்து நாவில்
ஊருத அமிழ்து ஊற உடல்
புளகித்து
உள்ளமெல்லாம் உருகினாளே"

பீஷ்மர் மீண்டும் கூறினார் 'காற்றினைப் போல் விரையும் குதிரைகள் பூட்டப்பட்ட தேரைச் செலுத்துவதில் வல்ல கர்ணனும், உக்கிரமான சேனையைச் செலுத்துவதில் வல்லவனான சகுனியும், கேள்வி ஞானம் உடைய தம்பி துச்சாதனனும், நீயும் - ஆக நீங்கள் முன்னர் ஆலோசித்த தீய நோக்கத்தின் பயன் நாளைக்கே தெரிந்துவிடும்.

உன் கடுஞ்சொல் பொறுக்க மாட்டாமல் விதுரனும் வில்லை ஒடித்து விட்டான். தன்னை அதிரதனாய் நிறுத்தாமல் போனால் கர்ணனும் போருக்கு வரமாட்டான் அர்ச்சுனனையும் வீமனையும எதிர்த்துப் போர் செய்ய வல்லவரகள நீயும் நானுமின்றி வேறு யார் எஞ்சியிருக்கிருர்கள்?

நீதி தவறிய பக்கம் நம் பக்கம். எதிரியின் பக்கமோ? அறத்தை வளர்க்கும் நீதியுடைய பொய் இல்லாத மெய்மையுடைய தருமன் பாண்டவர் பக்கம் உள்ளான். மணம் கமழும் துளசி மாலையைத் தரித்த கண்ணன் நீதியின் பக்கம் இருக்கிருன். ஆதலால் அரிய ஆற்றல் கொண்டு செய்யும் போரில் இறவா்து அந்தப் பக்கத்தில் இருந்தவரைக் காண்பதே அன்றி, இந்தப் பக்கத்தில் உள்ளவர்களில் இன்னும் இறக்கமாட்டாதவர் யார்?"

"புரிந்தவர் வளர்க்கும் நீதிப்
பொய்யிலா மெய்யனங்கே
செருந்தவிழ் துளபமாலைத்
திருநெடுமாலு மங்கே
அருந்திறல் அமரில் பொன்ருது
அங்கு இருந்தவரை இங்கும்
இருந்தவர் காண்பதல்லால்
யார்கொலோ இறக்கலாதார்

-வில்லிபாரதம் (260)
வீட்டுமப்பருவம்

துரியோதனன் செய்வதறியாது திகைத்து நின்ருன். செய்த தவறுகளை ஒரு கணம் நினைத்துப் பார்க்கிருன்.

துரியோதனின் நிலையை அறிந்த வீடுமன் இதுதான் சமயம் என்று அவனுக்குப் புத்தி மதி செசல்வதைத் தொடர்கிருர்:

துரியோதனா! கவலைப் படாதே, இனி நடக்க வேண்டிய செயலுக்கு உனக்கு உறுதியைச் சொல்கிறேன். படைக்கலம் கொண்டு செய்யும் போரில் விரைவாய் போய் போர்க்களத்தில் போர் செய்து அவர்களைக் கொல்வோம் அல்லது அவர்கள் கைகளில் இறப்போம். புறப்படு" என்றதும், துரியோதனன் கதிரவனைப் போல் தேரில் ஏறிச் சென்ருன்.

அறத்திலிருந்து தவறினால் தண்டனை அனுபவிக்க வேண்டியதுதான் என்பதை பிதாகமர் துரியோதனனுக்கு உணர்த்தவேண்டிய நேரத்தில் உணர்த்தி, தன்னுடைய நிலையினையும் துரியோதனுக்கு விளக்கி விட்டார்.

கற்புடைய பெண்ணின் கண்ணீருக்குப் பதில்சொல்லித் தானே ஆக வேண்டும். பாஞ்சாலியின் கண்ணீர் துரியோதனனைப் பழி தீர்த்துக்கொண்டதில் ஆச்சரியமென்ன இருக்க முடியும்?



# மத்யரங்கம்-காவிரிக்கரை சிறப்புத்தலம்

திரு. தே.ரா. ரெங்காச்சாரியார்-ஸ்ரீரங்கம்.

மத்யரங்கம் என்னும் சிறப்புற்ற வைணவத்தலத்தைப் பற்றிக் கூறுங்கால் ஆதிரங்கம் அந்தியரங்கம் என்றும் தலங்கள் இருக்க வேண்டுமே என்று தோன்றுகிறதல்லவா! ஆம், உண்டு என்கிறுர்கள், நம் கன்னட மாநிலத்தைச் சேர்ந்த ஆன்மீக வைணவ நண்பர்கள். நான்கு, ஐந்து வருடங்கள் முன், பங்களூரில் நான் சில தினங்கள் தங்கிய போது, விஜய நகரா என்ற நகர்ப்புற பகுதியில் மேற்கண்ட கன்னட குடும்பத்தினருடன் பேச வாய்ப்புக் கிடைத்தது. திருச்சியிலிருந்து 8 கி.மீ. தூரத்திலுள்ள திருவரங்கம் எனத் திகழும், நம் அரங்கனைப் பற்றி முழு வீச்சில் பேசினேன். மனித குலத்திற்கு ஏற்ப, யாராயினும் சரி, எங்கள் ஊர் என்று பெருமைப் படுவது சகஜமே. நீண்ட ஆகிருதியில், பள்ளி கொண்ட பங்கயக்கண்ணன், எங்கள் மால் ஸ்ரீ ரங்கநாதன் கண்வளரும் காட்சியின் பெருமை பற்றி சிறிது அதிக நேரம் பேசினேன். லிட்டில் ப்ளவர் பதிப்பகத்தாரின், இக்ஷ்வாகு குலதனம் மற்றும் சில புத்தகங்களிலிருந்து, ஒரு முழு நாளே விரிவுரையாக்கப் போதிய விருத்தாத்தங்கள் உள. திரேதாயுகத்தில் அதாவது ராமாயண காலத்திலிருந்து ஏற்பட்ட ஸ்வயம்வ்யக்த ஸ்தலம் என்பதையும், வைணவத்திருப்பதிகள் 108ல் முதன்மை அல்லது ஆதியானது எனறு யாராலும் ஒப்புக்கொள்ளப்பட்டது அயோத்தியில் அரசு புரிந்த இக்ஷ்வாகு கடுந்தவம் செய்து சத்யலோகம் சென்று அர்ச்சாவதார ரங்க விமானத்தை பூலோகத்திற்கு கொண்டு வரப்பட்டு ஸ்ரீராமபிரான் வரை அக்குல அரசர்களால் ஆராதிக்கப்பட்டு பிறகு அன்னாரின் பட்டாபிஷேக சமயம், விபீஷணருக்கு அன்பாக அளிக்கப்பட்டதையும் அவர் அதை இலங்கைக்கு எடுத்துச் செல்லும் வழியில், ஸ்ரீ ரங கத்தில் சிறிது அவகாசம் தங்கியதும், பரமன் இங்கேயே தங்க விருப்பம் என்பதை தெரிவித்து இங்கிருந்த படியே தென்திசை இலங்கை நோக்கி விபீஷணருக்கு அநுக்கிரகம் புரிந்து வருகிறுர் என்பதை விவரித்துக்கூறி முடித்தேன்.

இச்சந்தர்ப்பத்தில்தான் கன்னட நண்பர்கள், மைசூர பங்களூர் சாலையில் 16 கிமீ தூரத்திலுள்ள ஸ்ரீரங்கப்பட்டினம்தான் ஆதிரங்கம் என்றும் ஸ்ரீரங்கம் அந்தியரங்கம், இந்த இரண்டிற்கும் மத்தியில் உள்ள சிவசமுத்திரத்தில் பள்ளி கொண்ட பெருமாள் மத்தியரங்கம் என்றும் அவர்கள் பரக்கப் பேசி முடித்தார்கள். இம்மூன்று தலங்களையும் தரிசித்தால்தான் பலன் கிட்டும் என்ற சமநோக்கு கொண்ட எண்ணம் இருப்பது அவரகள் முகத்தில் பிரதிபலிப்பதைக் கண்டு கொள்ள முடிந்தது. பெரிய தததுவத்தை அளிக்கும் சிவவாக்கியரின் செய்யுளும் இப்படிப்பட்ட சமநோக்கின் பெருமையை வலியுறுத்துகிறது.

> "எங்குமுள்ள ஈசனார் எம்முடல் புகுந்த பின்
> பங்குகூறு பேசுவார் பாடு சென்று அணுகிலார்
> எங்கள் தெய்வம் உங்கள் தெய்வம் என்று இரண்டு பேதமோ
> உங்கள் பேதமன்றியே உண்மை பேதமில்லையே

எப்படியும் மத்யரங்கம் போக வேண்டுமென்று அப்பொழுது ஏற்பட்ட எண்ணம் ஒரு மாதம் முன்தான் நான் மைசூரிலிருந்து திருச்சி திரும்பும் சமயம பூரத்தி ஆயிற்று புகழ்பெற்ற ஸ்ரீ ரங்கப்பட்டினம் ரங்கநாதனை முன்பே தரிசித்திருக்கிறேன். மத்யரங்கம் செல்ல பஸ் வசதி, பூஜா காலம் மற்ற விவரங்கள் தெரீநது கொள்ள மைசூரில் நான் தங்கிய இடத்தில் வாய்ப்பில்லை. பஸ் நிலையம் சென்றேன். சிவசமுத்திரம் என்று அறிவிப்புப் பலகை இருந்த போதிலும் நேராக பஸ் இல்லை. நிலையத்தில் தமிழ், ஹிந்தி, ஆங்கிலம் தெரிந்த நபர் யாரும் சுலபமாகக் கிடைக்கவில்லை. வெகு நேரம் அலைந்த பிறகு Bluff என்ற இடத்தில் இறங்கி வேனில் செல்ல வேண்டும் எனத் தெரிந்து கொண்டேன். இவ்வாண்டு முதலில் உடுப்பி, சிங்கேரி, தர்மஸ்தலா, தலைக் காவேரி, பேலூர் போன்ற இடங்கள் சென்று வந்ததால் எந்தப் புதிய இடமாயி

லும் சமாளிககலாம என்ற உறுதியுடன் பஸ்ஸில் ஏறினேன். Bluff என்ற இடத்தில் இறங்கி அரை மணி நேரம் சுற்றிலும் பார்த்து பரவசமானேன் மலைகளினால் சூழப்பெற்ற இயற்கை வனப்பையும், குளுமையான காற்றையும், பரந்து கிடக்கும் நீர் நிலையையும் கண்டு ரஸித்தேன். சிறிது நடந்தால் செக்போஸ்டு வருகிறது. அங்கிருந்து கோவிலுக்குத் தனியார் வேன் உண்டு அதில் ஜனங்களை அடைத்துத்தான் செல்கிறுர்கள். கூரையில் தலை இடி பட்டு வேனில் செல்வதை விட நடப்பதே மேல் என்று பிறகுதான் தெரிந்தது. கோயிலில் காத்திருந்து அரசகரை அழைத்து வந்து பரமனை தரிசித்தேன். மிகச்சிறிய ஊர். கோவிலும் சிறியது தான். தமிழ்நாட்டுக் கோயில் போலவே அமைப்பு. சித்திர வேலைப்பாடோ அழகிய மண்டபங்களோ கிடையாது. பெருமாள் தாயார் தனித்தனியே சன்னதிகள், மற்ருெரு சன்னதியும் உண்டு. ஆனால் எம் பெருமான் ஜகன்மோகனரங்கன் சயனித்திருப்பது நம்மை முழுதும் வசீகரிக்கிறது. குறுகிய சிலாரூபம் தான். மாலைப் பொழுது ஆயிற்று என்ருலும் வெகு நாளைய அவா பூர்த்தி ஆயிற்று எனும் மனத் திருப்தியுடன் மூன்று கி.மீ. நடந்து பஸ் ஏறி கொள்ளேகால் பஸ் நிலையம் வநதேன். அங்கிருந்து சேலம் வழியாக ஸ்ரீரங்கம் நள்ளிரவு வந்து சேர்ந்தேன். வெகுநாளைய திட்டத்தை சாதனை புரிந்த மன நிறைவில், எனக்கு அன்று ஏற்பட்ட சிரமங்கள் தெரியவில்லை. Bluff-ல் தங்கி சிவசமுத்திரம் நீர்வீழ்ச்சியில் ஸ்னானம் செய்யவிலலையே என்ற ஒரே ஒரு வருத்தம்தான். நீர்வீழ்ச்சி அங்கிருந்து சுமார் 2 கி.மீ. தான். Bluff என்ற ஆங்கில வாரத்தைக்கு நல்ல அர்த்தம் இல்லை. அங்குக் காணும் இயறகை வனப்பு மெய்யோ, பொய்யோ எனத்திகைப்பதால் அந்த வார்த்தை வந்திருக்கலாம்.

மிகவும் வசீகரமான சூழ்நிலையில் அமைந்திருக்கும் தலங்களுடன் புராண வரலாறுகள் புதைந்து கிடக்கும் சரித்திர வரலாறும் அத்துடன் பின்னியிருக்கும் மத்தியரங்கம் எனப்படும் சிவசமுத்திரம், தன்னிடத்தே நிகரற்ற வரலாறுகளை அடக்கிக் கொண்டிருக்கலாம். மூன்று தலங்களிலும் ஒரு ஒற்றுமையைக் காணமுடிகிறது. பிரும்மகிரி மலையில், அகஸ்திய முனிவரால் கொண்டு வரப்பட்ட, தலைக்காவேரியில் உத்பவித்து மக்களை வாழ வைக்கும் அன்னை காவேரி, இம்மூன்று தலத்திலும், தல்த்தைச் சுற்றி மாலை போல் இரண்டாகப் பிரிந்து, பிறகு ஒன்று சேர்கிறது என்ருல் நாம் வியக்காமல் இருக்க முடியாது இதில் தெய்வீகத் தன்மை இருப்பது தெற்றென விளங்கும். பன்னிரு ஆழ்வார்களும் தெய்வீக அம்சம் பொருந்தியவர்கள். ஒரு வேளை அவர்கள் இயற்றிய பிரபந்தங்களின் மகிமைக்காகவே, மூன்று இடத்திலும் காவேரி மாலை போல் ஓடி ஆதி, அந்திய, மத்ய ரங்கங்களை சமமாகவே கருதுவதாகத் தோன்றுகிறது. தொண்டரடிப் பொடியாழ்வாரின் 45 பாசுரங்கள் அடங்கிய திருமாலை என்ற பிரபந்தத்தில் 23வது பாடடாக அமைவது காவேரியின் பெருமையை விளக்குகிறது. காவேரி வாசிகளான நாமும் பெருமைப் படலாம்.

**“கங்கையின் புனிதம் ஆயகாவிரி**
**நடுவு பாட்டு**
**பொங்கு நீர் பரந்து பாயும்**
**பூம்பொழில் அரங்கந்தன்னுள்**
**எங்கள் மால் இறைவன் ஈசன்**
**கிடந்தோர் கிடக்கை கண்டும்**
**எங்ஙனம் மறந்து வாழ்வேன்**
**ஏழையேன் ஏழையேனே”**

‘காவிரி நடுவு பாட்டு’ என்பது மூன்று தலங்களுக்கும் பொருந்துவதால் ஆழ்வார் மூன்று தலத்தையும் தான் பாடியிருக்கிறுர் போலும். இந்த பாசுரத்தின் மற்ருெரு சிறப்பு, கங்கையை விட காவிரி சிறந்தது என்பதைக் குறிக்கிறது. கங்கையின் புனிதம் ஆய என்ற மூன்று பதங்களின் கோர்வையாக சுப்பிரமணிய பாரதியார், நம் காவிரியின் பெருமை பற்றி இன்னும் ஒரு படி மேலே சென்று விடுகிறுர். அஃது “கங்கை நதிப்புரத்து கோதுமைப் பண்டம் காவிரி வெற்றிலைக்கு மாறு கொள்வோம்...” கோதுமை, அரிசியைப் போல் முக்கிய உணவுப்பொருள். வெற்றிலை வேண்டுமானால் உபயோகிக்கலாம் - உணவு போல அவசியப் பொருள் இல்லை. ஆனாலும் இந்தியாவில் எங்கும் வெற்றிலையை மிகவும் விரும்புகிறுர்கள். கோதுமை

(44-ம் பக்கம் பார்க்க)

# சடகோபரந்தாதியின் கதை

திரு. எம்.என். திருமலய்யா - சேலம்.

கம்பநாட்டாழ்வார் இராமாயணம் பாடி முடிந்தவுடன் வாக்கின் முதிர்ச்சி நிலையிற் பாடிய நூலே "சடகோபரந்தாதி" என்பர். கம்பரால் இயற்றப்பட்ட இராமாயணம் கம்பராமாயணம் எனப்பட்டது. இதற்குக் கம்பரிட்டப் பெயர் "இராமாவதாரம்". இவருடைய இயற்பெயர் ஏகம்பர். பெயர் மருவி வந்ததென்றும் கூறுவர். ஸ்ரீராம பக்தியை மிகுதியாகப் பெற்றதால் கம்பநாட்டாழ்வார் என்று வழங்கப் படுவதற்கு ஏற்றவராவார்.

ஆழ்வார் நூற்றந்தாதி என்கிற சடகோபரந்தாதி சடகோபரது அந்தாதி என விரியும். அந்தாதி அந்தத்தை ஆதியாக வுடையது. இது ஒரு பிரபந்தம்.



ஸ்ரீகம்பர் பெருமான்.

## நம்மாழ்வார் - சடகோபர்

சடகோபர் ஸ்ரீவைஷ்ணவ மதத்திற்சிறந்த மெய்யடியார். பன்னிரு ஆழ்வார்களில் நம்மாழ்வார் ஐந்தாமவர். சிகரம் போன்றவர். பாண்டிய நாட்டில் தாமிரபரணி நதித்தீரத்திலுள்ள திருக்குருகூரில் வேளாள வருணத்தில் அவதரித்த பெரியார். காலம் கி.பி. 10-ம் நூற்றாண்டின் பிற்பகுதியாகும். இவர் பிறந்தது முதல் அழுதல், பால் குடித்தல் போன்ற குழந்தைச் செய்கையொன்றையும் கொள்ளாமலே உலக நடைக்கு மாறாக வாட்டமின்றிப் பரிபூரணமாக வளர்ந்து வருவதைப் பெற்றோர்கள் கண்டு இவரை அந்த ஊரில் உள்ள திருமாலின் திருக்கோயிலில் கொண்டுவிட, இவர் அங்கு இருந்த ஒரு புளிய மரத்தின் கீழ்ச்சென்று பதினாறு பிராயமளவும் கண் திறவாமல் மௌனமாக வீற்றிருந்தார். குழந்தை பிறந்த உடனே, தனது ஸ்பரிசத்தால் அஞ்ஞானத்துக்கு உள்ளாக்கி அழுதல், அரற்றுதல் முதலியன செய்யும்படித் தூண்டி விடும் தன்மையுடைய சடமென்னும் வாயு இவ்வாழ்வார் அவதரித்த போது தொடுவதற்கு வர, இதனை அவர் உங்காரத்தால் ஒறுத்து ஓட்டிவிட்டதால் சடகோபர் என்று நாமமாயிற்று. இளமையில் உலக இயற்கைக்கு மாறாக இருந்தார். ஓதாது உணர்ந்த உத்தமர். வேதங்களை அழகு செய்து தமிழில் திருவாய்மொழிமூலம் கண்டவர். இவரது பிரதம சீடர் மதுரகவியாழ்வார். நம்மாழ்வாருடன் சேர்த்து மதுரகவியை ஆழ்வாராக்கியது வைஷ்ணவ சமூகம். ஜாதி, மதம் முதலிய வித்தியாசமில்லாமல் சாமான்யர்களுக்கு வேத ரகசியங்களை அவர்கள் பேசும் பாஷையிலேயே வெளியிட்டு மோட்சத்திற்கு பக்தி மூலம் வழிகாட்டிய பெரியார்.

நம்மாழ்வார் வீற்றிருந்து தியானம் செய்து கொண்டிருந்த புளியமரத்தடியிலேயே அவரை அடக்கம் பண்ணிய மதுர கவிகள் அங்கே கோயில் ஒன்றைக் கட்டினார். அந்த "உறங்காபுளி" தான் வெகு முதிர்ந்த பருவத்தில் இன்றும் காணப்படுகிறது.

பல்லவ சாம்ராஜ்ஜியத்தில் தோன்றிய பக்தி ஞானமார்க்க இயக்கம் பெரியதாகி தெற்கே பாண்டிய நாட்டின் எல்லை வரை கடைசி ஆழ்வார் என்று கருதப்படும் நம்மாழ்வார் காலத்தில் உச்ச நிலை அடைந்துவிட்டது. இயக்கம் பழமரமாக வளர்ந்தபோது நான்கு திக்குகளிலும் சாமானியர்கள் யாவரும் பழங்களின் ருசி நன்கு அறிவதற்கு "சடகோ பரந்தாதி" எனும் நூல் வழிகோலிற்று.

**இராமாயண அரங்கேற்றம்**

கம்பநாட்டார் தான் இயற்றிய இராம காதையை திருவரங்கத்தில் அரங்கேற்றம் செய்தார். மூன்றும் குலோத்துங்கன் அரசு செய்த காலத்தில் (கி.பி. 1178-1218) வாழ்ந்தவர். அரங்கேற்றம் செய்வதற்குள் அவருக்கு நேர்ந்த இடையூறுகள் பல. தில்லைவாழ் அந்தணர்கள் அவர் காவியத்தில் வினாக்கள் பல எழுப்பி, பதில்கள் கேட்டு புலமையை அறிந்து அரங்கேற்றுவதற்கு ஒப்புதல் அளித்தார்கள். அதைப்பெற்றுக்கொண்டு கம்பர் ஸ்ரீரங்கத்தில் காண்பிக்க அங்கிருந்த வைஷ்ணவர்கள் திருநறுங்கொண்டை என்னும் ஸ்தலத்திலிருந்த சமண தமிழ்வித்வான்களிடம், மற்றும் சில பண்டிதர்களிடமும் சம்மதம் பெற வேண்டுமெனக் கூற அவ்விதமே வாதில் வென்று, ஒப்புதலும் பெற்று, வைஷ்ணவ மகா பரமாசாரியாகிய ஸ்ரீமந் நாத முனிகளின் கட்டளைக்கிணங்க ஒரு மண்டப கைங்கரியஞ் செய்து முடித்து, அவர் திருவடிகளில் காவிய ஓலைச் சுவடிகளை வைத்தார். திருவரங்கத்தில் இறைவன் பள்ளி கொண்டான் பான்மையைக்கண்டு மன முருகிப்பாடினார் கம்பநாட்டாழ்வார். அந்த சுப தினத்தில் அரங்கேற்ற எத்தனமாயிருக்கையில் ஸ்ரீரங்கநாதன் அர்ச்சக முகமாக ஆவிர்ப்பவித்து "நீ நம் சடகோபனைப் பாடினையோ? பாடினால்தான் நாம் உனது ராமாயணத்தைத் திருவுள்ளம் பற்றுவோம்" என்று அருளிச்செய்ய, அவ்வாறே கம்பர் நூறு கட்டளைக் கலித்துறையில் "சடகோபரந்தாதி"யைப் பாடினார் என்பர். அந்தமே முதற்செய்யுளின் ஆதியாக அமைந்திருக்கிறது.

ஆழ்வார் திருவடிகளே சரணம்! *

# கீதைச் சிந்தனை

ஆயிரக்கணக்கான நதிகளிலிருந்து தண்ணீர் வந்து விழுந்தாலும் சமுத்திரம் பொங்கி வழிவதில்லை. அது எப்போதும் போலவே இருக்கிறது. அது போல ஒருவனுடைய மனதில் எத்தனை ஆசைகள் வந்து பிரவேசித்தாலும் அவற்றினால் எவன் நிலைக்குலையாமல் இருக்கிறானோ, அந்த ஆசைகளைப் பின்தொடர்ந்து எவன் செல்லாமல் இருக்கிறானோ, அவன் தான் மோட்சமாகிய சாந்தியை அடைகிறான்.

நன்றி: ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்

# பிரதட்சிணம்

விநாயகருக்கு ஒரு பிரதட்சிணம்.

சூரியனுக்கு இரண்டு பிரதட்சிணங்கள்.

பரமேஸ்வரன், அம்பாளுக்கு மூன்று பிரதட்சிணங்கள்.

ஸ்ரீவிஷ்ணு, ஸ்ரீலட்சுமி, மகான்களின் சமாதிகளுக்கு நான்கு.

அரசமரத்துக்கு ஏழு.

பிரதட்சிணம் செய்யும்போது நிதானத்துடன் அடிமேல் அடிவைத்து ஸ்தோத்திரங்களைச் சொல்லிக்கொண்டே அமைதியுடனும், தூய உள்ளத்துடனும் செய்ய வேண்டும். தன்னைத் தானே ஒருபோதும் சுற்றக்கூடாது.

ஆதாரம்: 'ஆனந்தஜோதி' எனும் நூல்

திரு. முசிறி சங்கரன்.

# புராண ரத்னங்கள்

திரு. எஸ். ராமசாமி மதுரை.

புராணம் என்பது ஒரு ரத னாகரம் (கடல்) அதன் ஆழத் தில் விலை மதிப்பில்லா பல ரத்னங்கள் உண்டு. அவைகளில் நமக்கும் சொந்தம் உண்டு

**ஸனகாதிகள்**

ஸனகர், ஸனந்தனர், ஸனா தனர், ஸனதகுமாரர எனனும் இந்த நான்கு முனிவர்கள் ப்ரும்ம தேவனின் மானஸ புத திரரகள் ஆவார்கள. ப்ரும்மா இவர்களைப் படைத்து மேலும் உலகைப் படைக்கும்படி இவர் களை நியமித்தார் இவர்களோ உலக வ்யவகாரத்தை வெறுத்த னர. மோக்ஷ மார்கத்தை உப தேசிக்கும் நான்முகனையே சரணடைந்தனர் அழிவற்ற ப்ரம்மம் ஒன்றே இருக்கிறது அந்த ப்ரம்மததை பலவேறு நாம ரூபங்களால வழிபடுகின் றனர் நாராயணனே அந்த பரப் ப்ரும்மம் என்று வேதம் சொல்லுகிறது அந்த ப்ரும் மத்தை 'ஹரி சரணம்' என்கிற பஞ்சாக்ஷரத்தை ஜபம செய்து கொண்டு நீங்களும் உபாஸியுங் கள் என்ருர் ப்ரும்மா. உடனே ஸனகாதிகள் பகவானை உபா சித்தனர். பகவான் சுத்தமான வெண்மை நிறமுடைய அன்ன பக்ஷி போல் ரூபம தாங்கி அவர்கள் எதிரில் தோன்றி னான். பாலையும், நீரையும் கலந்து வைத்தால், நீரை விலக கிப் பாலை மட்டும் பரு கும திறமை அன்னப் பற வைக்கே உண்டு. உலகில் சாஸ்திரங்களிலும் அஸாரத்தை தள்ளி, ஸாரத்தையே எடுத்துக் கொள்ள வேண்டுமென்று காட் டுவதற்காக பகவான் ஹம்ஸ ரூபத்தில வந்தான். ஸனகா திகள் பகவானை வணங்கித் துதிததனர். பகவானும் அவர் களைப் பார்தது, "நானே பர தத்வம். என்னைத் தவிர உல கில வேறு எதுவும் இலலை. அணுவுககு அணுவாய், மஹத் திற்கு மஹத்தாய், உலகில் எங் கும் வயாபித்து இருப்பவன நானே. ஜடப் பொருள்களை அஸாரம் என்று விலக்கி, ஆத்ம ஸவரூபத்தை ஸாரம் என்று எடுத்து, தனனிடமே அநத பர மாத்மாவை காணுபவன் பரமப தம் அடைவான்" எனறு உப தேசிததார் பகவானின் திருவ ருளால ஞானப பிரகாசம் பெற்ற ஸனகாதிகள, ஜீவன் முக்தர் களாய் உலகில் சஞ்சரித்துக் கொண்டு இருககின்றனர் இவர கள் ஐந்து வயது குழந்தை வடிவத்திலேயே இருப்பவர்கள மூப்பும் மரணமும் அற்றவர்கள். சித்தர்கள் மஹா பாகவதர்கள் ஹரி சரணம் எனறு நாம சங் கீர்த்தனம் செய்து கொண்டே இருப்பவர்கள். அனன பானங் கள் இன்றி, ஹரிகதை ஒன்று லேயே ஜீவிப்பவர்கள் எங்கும் தடையின்றி உலகின் நன்மைக் காகவே ஸஞ்சரிக்கும் முனீச்வ ரர்கள். ஊர்த்வ ரேதஸ்க ளான யோகிகள் ஜகத்குரு வான நாரதருக்கும் குருவான வர்கள் ஹமஸ ரூபியான பக வானின் சிஷ்யர்கள் அரூபமாய் இருக்க சக்தி இருந்தபோதிலும விளையாட்டாக ரூபம தரித்து உலகில் சஞ்சரிககின்றனர்.

**நாரதர்**

நமது புராணங்களில் நாரதர் வராத கதையே கிடையாது அப்படி இருந்தால் அந்தக் கதை ரஸிக்காது. த்ரிலோக சஞ்சாரியான நாரதர் எதிலும புகுந்து புறப்படுகிறுர் அவரை கலஹப்பிரியன் எனறு உலகம் கூறும் அதைப் பற்றி அவர் கவலைப் படுவதில்லை. அவர கலகம் மூட்டாவிடில் உலகில் பல நன்மைகள உண்டாகவே உண்டாகாது. தனக்கு ஒரு லாபமின்றி உலகில் அலைவார் அவருக்கு உற்ற துணை அவ ருடைய வீணை ஹரி கீரத தனம் செய்வதே அவருடைய பொழுதுபோககு ஸத்யலோ கம், வைகுண்டம், கைலாசம், இந்த்ரலோகம், குபேரன், யமன், வருணன், முதலிய தேவர்களின் சபைகள். வ்யாஸர், வால்மீகி போன்ற முனிவர்களின் ஆச் ரமங்கள் எங்கும் இவருககு வர வேற்பு உண்டு. அதோடின்றி இரணியன, ராவணன், கமஸன முதலிய பொல்லாத அரககரகள் கூட இவரை வணங்கி வர் வேற்று, ஆலோசனை கேட்டு அதன்படி நடக்குமபடி இவ ருக்கு ஒரு முக்வெட்டு இவர் பெருமையை சொல்லிமாளாது இவர் வீணை வாசிப்பதிலும்,

பாடுவதிலும் கூடு இணையற்ற பண்டிதர் வேதம் முதலிய ஸர்வ சாஸ்திரங்களிலும் கரை கண்டவர். பகவானுக்கு மிக வும் நெருங்கிய நண்பர். வ்யாஸர், வால்மீகி இருவரையும் ஸ்ரீபாகவதமும் ஸ்ரீராமாயணமும் எழுதும்படி தூண்டிய வர். பெரியோர்களான முனிவர்களுக்கு மட்டுமின்றி ப்ரஹலாதன், துருவன் போன்ற குழந்தைகளுக்கும் உபதேசித்து தயார் செய்தவர். பஞ்சாக்கினி மத்தியிலும், பனிமலையிலும், காற்றைப் புசித்தும், தான் வாட வாட தவம் செயயும் முனிவர்களைப் போல் இன்றி உல்லாசமாய் ஹரே க்ருஷ்ண! அச்சுதா! மாதவா! என்று இனிய குரலில் பாடிக்கொண்டு திரிபவர். இவர் எங்கும் யாரிடமும் அழைப்பின்றி முன்னறிவிப்பின்றி திடீரென சமயத்தில் வந்து, சமயோசிதமாய் பேசி, ஸஹஜமாய் பழகுவார். கவடு சூதற்றவர். சுயநலமற்றவர். இவர் குணங்களை பகவானே சொன்னாலும் எண்ணில் அடங்காது.

வ்யாஸர்

எல்லா முனிவர்களுக்கும் அக்ர கண்யரான வ்யாஸர் விஷ்ணுவின் ஞான கலா அவதாரம். பரா்சர முனிவர் படகில் ஏறி யமுனையைத் தாண்டும் பொழுது, படகோட்டியாய் அமைந்த ஸத்யவதீ என்கிற கன்னிகையைக் கண்டு அவருக்கு காமம் உண்டாயிற்று. காமத்தை வென்ற முனிவர், தமக்கு காமம் உண்டாகக் காரணம் என்னவென்று ஞான த்ருஷ்டியால் பார்த்ததும், பகவான் தனமூலமாய இவளிடம புத்ரனாய் அவதரிக்க சங்கல்பித்திருக்கிறுன் என்று தெரிந்தது. உடனே பராசர முனிவர் தனது ப்ரம்மசர்யத்தை இழக்காமலேயே, தவ வலிமையால் ஸத்யவதியினிடம் புத்ரன் தோன்றும்படி அருள் செய்தார். பகவானும் வேதவ்யா்ஸராய் தோன்றினான்.

நல்ல உயரமானவரும், நீருண்ட மேகம் போன்ற மேனி உடையவரும், செஞ்சடை தரிப்பவரும், கருணைக்கடலும், கமலம் போன்ற கண்கள் உடையவரும், கையில் கமண்டலு ஏந்தியவரும், மர உரி தரித்தவரும், ஊர்த்வபுண்ட்ரம் அணிந்த விசாலமான நெற்றி உடையவரும், சாந்தமான ஸ்வபாவம் உடையவரும், சிஷ்யர்களால் ஆராதிக்கப்பட்டவரும் வித்யாநிதியுமான பகவான் வேதவ்யாஸர் என்று வர்ணிக்கும் பொழுதே வேத வ்யாஸர் எதிரில் தோன்றி விடுகிறுர். இவர் இல்லாவிடில் நமக்கு சாஸ்திரம் இல்லை. ஸம்ப்ரதாயமும் இல்லை. நான்கு வேதங்களையும் ரக்ஷித்தார். ஐந்தாவது வேதமான மஹாபாரதத்தை அருளிச் செய்தார். ப்ரம்ம சூத்திரங்கள் எழுதினார். பதினெட்டு புராணங்களையும் பாதுகாத்தார். எல்லாவற்றிற்கும் சாரமான ஸ்ரீமத் பாகவதத்தை, தனது ஞானச் செல்வனான சுகருக்கு உபதேசித்தார். இவரைப் போல் லோகோபகாரி வேறு எந்த முனிவரும் இல்லை. இவருடைய பெருமை எழுத்தில் அடங்காது. இவர் இல்லாவிடில் நமது இந்து மதமே இல்லை எனலாம்.

ஸ்ரீசுகர்

பிறவி முதற்கொண்டே உலகில் வேறு சுகம், துக்கம் தெரியாதவர். அப்பா, அம்மா என்று அழைத்ததில்லை. முலைப்பால் சாப்பிட்டதில்லை. விளையாடினதில்லை. படிப்பும், பாடசாலையும் தெரியாது. சீதம், உஷ்ணம், சுகம், துக்கம், மானம், அவமானம், வெற்றி-தோல்வி, லாபம்-நஷ்டம், இல்லறம்-துறவறம், பாபம்-புண்ணியம், ஸ்வர்க்கம்-நரகம் என்றபடி எந்த த்வைதங்களிலும் தான் சிக்கவில்லை. ஏதோ ஒரு அனிர்வசனீயமான அத்வைத ஆத்மானந்தத்தில் மூழ்கி தானே ப்ரும்மமாகி நிற்பதால், இவர் சுகப்ருமம் எனப்படுகிறுர். இத்தகைய புத்ரனிடம் வ்யாஸருக்கு பாசம் உண்டு. இவரை நாடி 'புத்ரா' என்று கூவிக் கொண்டு ஓடினார். ஆனால் சுகப் ப்ரும்மமோ மறைந்து விட்டது. அங்குள்ள மரங்கள்தான் ஏனென்று கேட்டன. உண்மையில் சுகப்ப்ருமமும், ஸ்ரீராதையின் கையில் இருந்த கிளியாகும். ராதையும், கண்ணனும் கோலோகத்தை விட்டு பூலோகத்தில் அவதரித்ததும், அந்தக் கிளி ராதையின் பிரிவாற்றுமையால் உலகெங்கும் ராதா க்ருஷ்ணனைத் தேடிப் பறந்து கொண்டே கைலாஸம் வந்தது. அங்கு சிவன், பார்வதிக்கு க்ருஷ்ண கதை சொல்வதைக் கேட்டு, தானும் ரஸித்தது. பிறகு சிவ பெருமானின் நியமனத்தினால், வ்யாஸ புத்ரனாய், அயோனிஜனாய் அக்னி குண்டத்திலிருந்து தோன்றினார் சுகர். ப்ரும்ம நிஷ்டரான சுகர் இப்பொழுதும் எங்கேயோ பறந்தோடிவிட்டார்.

வயாஸர புதர ஶோகத்துடன் வீற்றிருந்தார். வ்யாஸ முனிவரின் சிஷ்யர்கள் அங்கு வந்து காட்டில் காய்கனி கொண்டு வர செல்லும் போது சிங்கம், புலி முதலிய விலங்குகளின் தொல்லை மிகவும் அதிகமாக இருக்கிறது, என்று விண்ணப்பித்துக் கொண்டனர். அவர்களுக்கு வ்யாஸர் 'பர்ஹாபீடம்' என்கிற பாகவத ஸ்லோகத்தை உபதேசித்து, இதை பாடிக் கொண்டே செல்லும்படி சொன்னார். ஒரு நாள் முனிவர்கள் பர்ஹாபீடம் என்று பாடிக் கொண்டே காட்டில் செல்லும் பொழுது, க்ருஷ்ண ஸ்வரூபத்தை வர்ணிக்கும் இந்த ஸ்லோகத்தைக் கேட்டு எங்கிருந்தோ ஓடி வந்த சுகப் ப்ரும்மம், "இந்தப் பாட்டு ஏது? யார சொல்லித் தந்தது?" என்று முனிவர்களைக் கேட்டார். உமது தந்தையான வ்யாஸர்தான் சொல்லித் தந்தார் என்று முனிவர்கள் சொல்லவே வ்யாஸரிடம் வந்து தனக்கும் சொல்லித்தரும்படி வேண்டினார். ஆஹா! இந்த ச்லோகம் எவ்வளவு இனிமையாக இருக்கிறது. சொல்லுக்குச் சொல் சுவையாக இருக்கிறதே! அப்பா! க்ருஷ்ண ப்ரேமையை தந்து என்னை மயக்குகின்றது. இனி எனக்கு ஸமாதி நிலையாலோ, கைவல்ய சுகத்தாலோ என்ன பயன்? எனக்கு இதையே சொல்லிக் கொடும்' என்றார். இதைக் கேட்ட வ்யாஸர் உள்ளம் குளிர்ந்து "என் அப்பனே! உனக்கு நான் தேடி வைத்திருக்கும் சொத்து இதுவே. இதை நீயே பெற்றுக் கொள்ள தகுதி உடையவன்" என்று சொல்லி, ஸ்ரீமத் பாகவதத்தை பூர்ணமாய் உபதேசித்தார். பாகவதாம்ருதத்தை கழுத்து மட்டும் குடித்து விட்டாராம். அதனால் மதோன் மத்தனாகி ஜடம் போலும், பிசாசு போலும், பாலகன் போலும் உலகில் அலைகிறார். குடிகாரன் அலைவதால் உலகம் பாவனமாகி விடாது. ஆனால் பாகவதாம்ருதத்தைக் குடித்த சுகமுனிவரின் பாத துளியால் உலகமே பாவனமாயிற்று.



---

(39-ம் பக்கத் தொடர்ச்சி)

யின் மதிப்பு வெற்றிலைக்கு சமம், அதுவும் நம் காவிரியின் வெற்றிலை-என்னே காவிரியின் பெருமை.

"பூம்பொழில் அரங்கந்தன்னுள்..." என்ற ஆழ்வாரின் வாக்குப்படி மூன்று தலங்களும் ஆற்றின் நடுவே, தீவு போல் உள்ள பூமியில் இருக்கிறது. முடிவாக ஸ்ரீரங்கம்- தமிழ்நாடு; ஸ்ரீரங்கப்பட்டினம் கன்னட மாநிலம். மத்யரங்கம் எனப்படும் சிவசமுத்திரம் ஒரு விதத்தில் இரண்டு மாநிலத்திற்கும் எல்லை போல் அமைந்துள்ளது. ஆக, இம்மூன்றையும் ஆன்மீக வழியில் பிணைத்து இரு மாநிலத்தாரும் பெருமைப்படுவது சமூக ஒற்றுமையை வேறூன்றச் செய்கிறதாகிறது என்று நாம் சந்தோஷம் அடையலாம். *

*************************

# பாருஷ்யம்

பாருஷ்யம் இரண்டு வகைப்படும்.

தேசம், ஜாதி, குலம் இவற்றைத் தூசித்தல், உரத்துப்பேசுதல், பேச்சினால் அவமதித்தல், அருவருப்பு உண்டாக்க எதிராகப் பேசுதல்; கல்வி, தொழில் இவைகளை நிந்தனை செய்து அதன் மூலம் அவற்றில் தேர்ந்த அறிவு பெற்றவர்களைத் தூற்றுதல், கிராமாந்தரமாகவும், அருவருப்பும் அமங்கலமாகவும் பேசுதல் ஆகியன "வாக் பாருஷ்யம்" என்பதாகும்.

சரீரத்தைத் தாக்குதல், கல், மண் ஆகியவற்றைப் பிறர் மேல் வீசி மனத்திலும் உடலிலும் புண் உண்டாக்குவது "தண்டபாருஷ்யம்" என்பதாகும்.

--க. இராமலிங்கம் - புதுப்பேட்டை.

*************************

# விநோத மூலிகை வில்வம்

- கவிஞர் காசி, எம்.ஏ., எம்.லிட்.,

வல்லமை காட்டிச் சுகமளிக்கும்
விநோத மூலிகை எனவழங்கும்
வில்வ இலையின் மாண்சிறப்பை
விருத்தப்பாவால் விளம்புகின்றேன்
பண்டு தொட்டுப் பாரதத்தின்
புனித விருட்சம் வில்வமரம்!
தொன்று தொட்டுத் தமிழகத்தில்
தென்படும் மூலிகை வில்வமாகும்.

வில்வம் என்பதைப் பன்மொழியில்
வேறு பெயரிட் டழைக்கின்றோம்!
பில்வா என்பர் வடமொழியார்!
பேலா என்பர் கன்னடத்தார்!
கூவிளம், நின்மலி, மாலூரம்,
குசாபி என்று பெயரிட்டு
மேவிய சிறப்பைத் தருகின்றோம்!
மணக்கும் பெயரே சிவத்துருமம்.



வில்வ இலை, பூ, காய், பிஞ்சு, வேர்,
தளிர், பட்டை கொழுந்து போன்ற
எல்லாப் பாகமும் மருந்தாக
இப்புவி மாந்தர் ஏற்கின்றோம்!
பாண்டு சோகை நோய்நீங்க,
பல்வலி, கண்ணோய் இடரகற்ற,
நீண்ட ஞாபகச் சக்திபெற,
நாடி வில்வ மருந்தேற்போம்.

வில்வ இலையைத் துகளாக்கி
வேண்டிய மட்டும் அரைத்தெடுத்து
நல்ல பாலுடன் கலந்து காய்ச்சி
நெய்யும் வெல்லமும் உடன்சேர்த்து
மெல்ல உருட்டி இலேகியமாய்
மானிடர் யாமும் உட்கொண்டால்
தொல்லை ஜீரணக் கோளாறும்
தொண்டை வலியும் சீராகும்.

மிளகுடன் வில்வ இலைசேர்த்து
மென்று தின்று நீர்குடித்தால்,
இளைப்பு நோயாம் ஆஸ்த்மாவும்
ஓடிப் போகும் மாயமென்னே!
இலையை நீரில் ஊறவைத்து
அந்த நீரை அருந்துவதால்
தலைவலி, வாந்தி, வயிற்றுவலி,
தடுமன், சளியும் உடன்நீங்கும்.

மூலிகை வில்வ இலைக்கசாயம்
மூளை பலத்திற் கேற்றதாகும்!
காலின் கீழே தோன்றுகின்ற
கால்ஆ ணிக்கு மென்மருந்து!
தடையில் லாமல் மாதருது
தோன்ற வைப்பது வில்வமாகும்!
விடையில் அமர்ந்த அரசனாரும்
விரும்பும் இலையே வில்வமாகும்.

ஆடா தொடையின் இலையோடு
அரிய வேம்பின் இலைகலந்து
வாடா வில்வ இலைசேர்த்து
வகையாய் அம்மியில் அதையரைத்து
சீராய் மாத்திரை போல்உருட்டிச்
சாப்பிடக் காய்ச்சல் குணமாகும்.
வீரிய மருநதாயப பயன்நல்கும்
வில்வ இலையின் மாண்பென்னே!

வில்வ மரத்தின் மீதிருந்து
உருவி இலையைச் சிவன்மீது
ஒல்லென எறிந்த குரங்கதனை
உற்றுப் பார்த்த அம்மையப்பர்,
ஏற்ற மதற்கு அளிக்கயெண்ணி

உவந்தே அரசப் பிறப்பளித்தார்
மாற்றம் பெற்றுக் குரங்குயர
மகத்துவ மீந்தது வில்வமென்றே!

குந்தம் என்ற படைதாங்கி
கரூரை யாண்ட' முசுகுந்தன்
விந்தை குரங்கு முகம்பெற்று
வாழந்து உயர்ந்து சிறப்பேற்றுர்.
வில்வ இலையால அருச்சித்து
வணங்கிச் சிவனை வழிபட்டோர்
எல்லா வளமும் மிகப்பெற்று
இதமாய் வாழ்வார் மண்ணுலகில்.

இரத்த பேதி வாதவீக்கம்
இருமல் வெட்டை கண்எரிச்சல்
கிரந்தி காசம் காமாலை
காதுநோய், விக்கல் மலச்சிக்கல்
அரிப்பு வீக்கம் உடலசதி
அசீரணம் விஷக்கடி பல்வலிக்கு
அரிய மருந்து வில்வமென்று
ஆன்றேர் கூறிய வழியேற்போம்.

மரத்தின் காற்றும் பிணிதீர்க்கும்
மரத்தடி வாசம் இதமளிகும்!
வரமாய்ப் பெற்ற மனிதஉடல்
வளமை யேற்றுப் பளபளக்கும்.
தொற்று நோயால் துயருற்றுத்
தொல்லையேற்கும் கால்நடைகள்
மற்றும் பிணியைத் தவிர்த்திடவே
மூலிகை வில்வம் உகந்ததன்றே!

*****



ஸ்ரீராமலிங்க பிரதிஷ்டை
(ஸ்ரீ இராமநாத சுவாமி திருக்கோயில்) இராமேஸ்வரம்.

-கமலா மாரியப்பன் - கோவை

# மாதங்களில் மாதவன்

கவிஞர் சோமசுந்தரப்பெருமாள் - தங்கவயல்.

உத்தரமாய் இக்கலியில் உயிர்கள் உயர்வுடனே
முத்திரை பதித்து முகில்வண்ணன் கருணையினால்
எத்திசையும் புகழ்மணக்க இதயத்தில் கோவிலாய்
வைத்தமனம் வளம்பெருக்கும் வருகின்ற சித்திரையாம்

நாசியிலே காற்றழுத்தி நாடுவிட்டு காடேகாமல்
தூசிவந்து பட்டபோது துணிமழுங்கிப் போவதுபோல்
பாசியென வளர்ந்து பயனற்றுப்போகா வண்ணம்
மாசில்லா நிலையுயர்த்தும் மாலவன் வைகாசியாம்

ஞானிக்கு வேண்டுகின்ற ஞானமதை வழங்குவான்
மோன வீடேகும் முயற்சியையும் கூட்டுவிப்பான்
வானவராய் நீர்வாழ வழிவிட்டு வேங்கடவன்
தானவராய் யுமையமர்த்தி தான்நிற்கும் ஆனியாம்

வாடிவிட்ட நெஞ்சமது வழிபிடித்து நடக்கத்தோன்றும்
கூடிவிட்ட இன்பமது குலவுகின்ற வேளையிலே
பாடிவிட்ட பாடல்போல் பாற்கடல் நாயகனும்
ஓடிவந்து உன்னருகே உவக்கும் ஆடியாம்

சேவடி காணுகின்ற சிந்தையால் தினம்தினம்
பூவடி புண்பட்டு போக்கிடம் மாறிடினும்
காவலனாய் கண்ணனையே கண்குளிரக் காணுகின்ற
ஆவலால் மனம்கவரும் ஆனந்தம் ஆவணியாம்.

முரட்டான குணம்முழுதும் முன்செல்ல நமைவிட்டு
திரட்டாக நற்குணங்கள் திரண்டு வந்ததென்றும்
பரவசத்தால், நமைநாளும் பாற்கடல் பரந்தாமன்
நிரவிடும் பாங்காய் நினைக்கும் புரட்டாசியாம்.

எப்பாரும் எத்திக்கும் எதிர்வந்து தப்பாது
ஒப்பாகும் வண்ணம் உவகையால் பூரித்து
எப்போதும் காத்திடவே எழில்வண்ண நாரணனை
செப்பிடும் செழிப்புடன் சேவிக்கும் ஐப்பசியாம்.

வார்த்தைகளால் சொல்லவொண்ணு வானளந்த
கோமானை

தீர்த்தத்தால் ஆடிநாம் திரளாக சென்றுகண்டு
சேர்த்த புண்ணியத்தால் சீரான வேங்கடவனை
ஆர்த்த பிறவிக்கெட அண்டுவது கார்த்திகையாம்.

கார்முகம்ப வண்ணனவன் காத்திடும் கண்ணனவன்
பார்முழுதும் போற்றுகின்ற பவளவாய் மன்னனவன்
சீர்கொண்ட கோலனவன் சிந்தையாய் இருப்பவனை
நேர்கொண்டு நாமடைய நெகிழ்வாகும் மார்கழியாம்.

கைவைத்த காரியங்கள் கைக்கூடி வாழ்விலே
மைவைத்த மங்கையர்கள் மனம் கண்டு
வைவைத்த சாரங்கனை வரும்துணை கொண்டு
பைவத்த பொருளாகும் பாங்குடை தைமாதமாம்.

மாசில்லா வாழ்வடைந்து மனத்தால் மாலவனை
வாசித்து அறிந்துதான் வகையாகக் கூடிடுவர்
பூசித்து புண்ணியனாம் பூவடி நிழல்சேர
யோசித்து நடக்கின்ற யோகமது மாசியாம்.

எங்குஎங்கென்று எண்ணிநாளும் எண்ணிலா இடர்பட்ட
பங்கமது தான்விலகி பக்குவமாம் பக்தியிலே
தங்கியே தான்வந்த தகைமை யெண்ணிநாம்
சங்கமமாகும் உயர் சார்புடை பங்குனியாம்.

பன்னிரு மாதங்களிலும் பார்த்தசாரதி பதம்
நன்னியே நாடிதினம் நளினமாய் கூடுவோர்
உன்னிய கருமத்தால் உயர்வுடன் வாழ்வர்
சென்னிதனை தாழ்த்தினோர்க்கு செழிப்பே எந்நாளும்.

***

( 4 -ம் பக்கத் தொடர்ச்சி)

புரிந்தார். அதுபோது ஆந்திர அரசு முதல்வர் திரு. என். ஜனார்த்தன ரெட்டி உள்ளிட்டுப் பல்வேறு துறைகளைச சார்ந்த அமைச்சரகளும் திருமலைக்கு வருகை புரிந்தனர்.

* * * *

முன்னாள் ஆந்திர மாநில முதல்வரும், சட்டமன்ற உறுப்பினருமான திரு. என்.டி. ராமாராவ் அவர்கள் 14-6-91 அன்று திருமலைக்கு வருகை புரிந்தார்.

* * * *

தமிழ்நாடுஆளுநர் திருபீஷ்ம நாராயண் சிங் அவர்கள் 20-6-91 அன்று திருமலைக்கும், அன்று மாலை திருச்சானூருக்கும் வருகை புரிந்தார். திருப்பதியில் ஆளுநர் அவர்களை தேவஸ்தான சிறப்பு நிலை உதவி செயலாட்சித்தலைவர் திரு பி வாசுதேவ நாயுடு அவர்கள் வரவேற்றார்.

* * * *

# நித்ய அபிஷேக ஸேவை

யாத்திரிகர்களின் வசதிக்காக திருப்பதியிலுள்ள தி.தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீகபிலேஸ்வரசுவாமி கோயிலில் புதியதாக "நித்ய அபிஷேக ஸேவை" ஒன்று புகுத்தப்பட்டுள்ளது.

இந்த ஸேவையில் பங்கேற்க விரும்பும் பக்தர்கள் ஆண்டொன்றுக்கு ரூ42/- செலுத்துதலோ அல்லது தேசியமயமாக்கப்பட்டுள்ள வங்கி ஏதேனும் ஒன்றில "செயலாட்சித்தலைவர், தி.தி. தேவஸ்தானத்தாஎம், திருப்பதி" என்னும் பெயரில் ரூ. 500/- முதலீடு செய்தலோ வேண்டும். முதலீடு செய்யப்பட்ட தொகைக்குக் கிடைக்கப்பெறும் வட்டித்தொகையினைக் கொண்டு தொடர்ந்து கிருஹஸ்தரின் பெயரில் நிரந்தரமாக ஸேவை நடத்தப்பெறும். பெரியவர்கள் இருவர் வருடத்திற்கு இருமுறை இச்ஸேவைக்கு அனுமதிக்கப்படுவர்.

நிரந்தரமாக தொடர்ந்து இச்ஸேவையினை நடத்த விரும்புவர் முதலாண்டுக்கான ரூ.42/- செலுத்துவதோடு ரூ. 500/- செலுத்துதல் வேண்டும்.

திருப்பதி நகரத்திலிருந்து 2 கி.மீ. தொலைவில ஸ்ரீகபிலேஸ்வரசுவாமி கோயில உள்ளது. கோயில வளாகத்திற்குள் ஆழ்வார் தீர்த்தம் எனும் திருக்குளம் ஒன்றுள்ளது. காலையிலும் மாலையிலும் அபிஷேகம் நாளும் இக்கோயிலில் நடைபெறுகின்றது.

( 3 -ம் பக்கத் தொடர்ச்சி)

திரு. பி.வி. நரசிம்மா ராவ் அவர்கள் பன்மொழி வல்லுநராகவும், அறிஞராகவும் திகழ்வது அவர்தம் ஆற்றலை இனங்காட்டுவதோடு, அத்தகுதிகளே முதன்முதலாக தென்னகத்தைச் சேர்ந்த ஒருவர் பிரதமர் பதவிக்கு அமர்த்தப்படுவதற்கு வழிவகுத்ததோடு, திரு. பி.வி. அவர்களை இன, இட, மொழி கடந்த ஏகோபித்த தலைவராக இந்நாடு ஏற்றுக்கொண்டதும், அவர்தம் சிறப்பினையும், இம்மண்ணின் பெருமையினையும் விளக்கிக்கூறும்.

எனவே இன்று நாட்டில் சமூக, பொருளாதார, சமய அரசியல் அமைப்புகளில் தேர்ந்த அணுகுமுறைகளையும், ஆக்கப்பூர்வமான செயற்திட்டங்களையும் மேற்கொண்டு அதனால் ஒவ்வொரு இந்தியனும் அமைதியான, அன்பான, தேசப்பற்று மிக்க வாழ்க்கையை அமைத்துக்கொள்ள வழிவகுக்கும் வகையில் இந்நாட்டை அழைத்துச்செல்ல திரு. பி.வி. நரசிம்மா ராவ் அவர்களுக்கு உறுதியும் ஊக்கமும் தந்திட அவ்வேங்கடவனை வணங்குவோமாக!

Edited and Published on behalf of the T T. Devasthanams by K. Subba Rao, M.A., and printed at T.T.D. Press by M. Vijayakumar Reddy, Manager, T.T.D. Press, Tirupati-517 507.

